# கோயில்களும் தெய்வீக முயற்சிகளும்



ப. சிதம்பரம்

# கோயில்களும் தெய்வீக முயற்சிகளும்

[திருமலை - திருப்பதி தேவஸ்தான
பொருளுதவியால் வெளியிடப்பட்டது]

ப. சிதம்பரம்

1, பாபுஜி தெரு, கிழக்கு தாம்பரம்,
சென்னை-600 059

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the book | : | "Temples and Religious efforts" |
| Language | : | Tamil |
| Written by | : | P. Chidambaram |
| Published by | : | P. Chidambaram<br>2, Balaji St. East Tambaram,<br>Madras-600 059. |
| Edition | : | First Edition |
| Date of Publication | : | 18-11-1992 |
| Paper Used | : | SehaSayee White Printing 12kg |
| No. of Pages | : | 96 |
| Paper Size | : | Crown |
| Size of the book | : | 18.5CM×12.5 CM |
| Size of matter | : | 15CM×9 5CM |
| No. of Copies | : | 1200 |
| Price | : | 13-50 |
| Printing type Point | : | 12 Point |
| Printed by | : | Vettri Achagam<br>91. Dr. Besent Road,<br>Royapettah. Madras-600 014. |
| Subject | : | Religious |

The first Edition of this book Published with the financial assistance from Triumala-Tirupathi Devastanam, Tirupathi.

# இதயம் பேசுகிறது

கடவுளை "நம்புவது என்றால் அல்லும் பகலும் அனவரதமும் கோயிலில் கிடக்க வேண்டும் என்றல்ல. நமக்கு அமைந்த வாழ்வு கடவுளால் என்ற எண்ணம் நிரந்தரமாக உள்ளத்தில் இருக்க வேண்டும். குழாய் அடியில் குடத்தைத் தூக்கி இடுப்பில் வைத்துக் கொண்டு அம்மையார் என்னதான் கையை காலை ஆட்டிக் கொண்டு நடந்தாலும் இடுப்பில் குடம் அங்குலம் கூட அசையாது. அம்மையார் மனம் தன்னையும் அறியாமல் குடத்தின் மீதிருக்குமே அதுபோல் கடவுள் பற்றிய எண்ணம் நம்மில் வாழ வேண்டும்.

முயற்சி செய்யுங்கள். எதுவாகிலும் அஞ்சாதீர்கள். இடைவிடாது உழையுங்கள். எப்போதும் ஒருவன் துணை செய்வான் அவன் இறைவன் என்பதை மனதில் வையுங்கள்.

இந்த நோக்கில் 'கோயில்களும் தெய்வீக முயற்சிகளும் நூல், உங்கள் கரங்களில்! எல்லாம் வல்ல திருப்பதி வெங்கடாஜலபதி துணைபுரிய வேண்டுவோம்.

ப. சிதம்பரம்

# பொருளடக்கம்

# கோயில்களும் தெய்வீக முயற்சிகளும்

## திருப்பதி-வேங்கடாசலபதி

திருப்பதியிலுள்ள பகவான் வேங்கடேசுவரரின் ஆலயம் ஆயிரம் மீட்டர் உயரத்தில் ஏழு குன்றுகட்கிடையே அமைந்திருக்கிறது. வேங்கடேஸ்வரர் கோடிக்கணக்கான உள்நாட்டு, வெளிநாட்டு பக்தர்களின் கண்கண்ட தெய்வமாவார்.

பக்தர்கட்கு சிறப்பான சுகமான ஏற்பாடுகளை திருமலை-திருப்பதி தேவஸ்தானம் செய்துள்ளது.

அருள்மிகு வேங்கடேஸ்வரரை, தரிசிக்க திருமலையில் பக்தர்கள் படும்துயரம் தீர, என் மனதில் பட்டதாவது:

திருமலை ஆலயத்தின் அமைப்பை ஏராள மான பக்தர்கள் உள்ளே வந்து நிம்மதியாகத் தரிசனம் செய்யும் வகையில் அமைக்கவேண்டும்.

திருமலைக்கு ஒரு புது அமைப்புத் திட்டம் தீட்டும்போது கீழ்க்கண்டவற்றை மனதில் கொள்ள வேண்டும். அவை: 1. ஒரே சமயத்தில் ஐயாயிரம் பேர் தரிசனம் செய்ய வசதியிருக்க வேண்டும். 2. தாராளமாக உள்ளே வந்து வெளியே போக பாதைகள் அமையவேண்டும். 3. பக்தர்கள் வேகமாக வரவும் திரும்பிச் செல்ல வும் வசதிவேண்டும். 4. பிரகாரத்தில் நெருக்கடி ஏற்படுவதற்கு இடம் தராமல் ஏற்பாடு செய்ய வேண்டும். 5. தேர் ஓடும் வீதியில் பல மாடிக் கட்டடங்கள் பக்தர்கள் தங்கவும், திருவிழாவை மேலே இருந்து கண்டுகளிப்பதற்கும் ஏற்ப அமைக்க வேண்டும். 6. வெளிப் பிரகாரத்தில் பக்தர்களுக்கு தெய்வபக்தி ஊட்டும்படியான ஓவியங்களை மாட்டவேண்டும். 7. திருக்கல்யாண மண்டபத்தை வெளிப்பிரகாரத்திற்கு மாற்ற வேண்டும்.

பிரகாரங்களில் மாற்றம் ஆலயத்திற்கு வெளியே யுள்ள தெருக்களிலும் மாற்றம் செய்யவேண்டும். நான்கு சுற்றுத் தெருக்களையும் நுழைவாயில் பக்கமுள்ள தெருவையும் அகலப்படுத்த வேண்டும். இவை தெற்கு, வடக்கு, கிழக்கு, மேற்கு என தேரோடும் வீதிகளாக்க வேண்டும்.

பிரதான நுழைவாயில் புஷ்கரணிக்கு அப்பால் வரை விரிவுபடுத்த வேண்டும். ஆலயத்தின் வடக்கு சுவர் வடக்குத் தேரோடும் வீதிவரை நீட்டப்பட வேண்டும். மேற்கு தேரோடும் வீதி ஆலயத்திற்கு பின்புறமும் அடுத்து தெற்கு தேரோடும் வீதியும், அமையவேண்டும்.

இதையே வேறுவிதமாகச் சொல்வதென்றால் இந்த இடங்கள் மதில் சுவரற்ற பிரகாரமாகவும் திருவிழாக் காலங்களில் சுவாமி உலா வரும் திரு வீதிகளாகவும் அமைந்துவிட்டதைக் கண்டு பக்தர் கள் திருப்தி அடைவார்கள்.

மேற்குப் பகுதியிலுள்ள திருக்கல்யாண மண்ட பத்தையும், மடப்பள்ளியையும், நான்காவது பிரகாரத்திற்குப் புது வெளி மதில் சுவர் அமைக் கப்பட்டதுமே மாற்றிவிடவேண்டும்.

மூன்றாவது பிரகாரத்தில் உட்பகுதி நீளசதுர மாகவும் 138 மீட்டர் நீளம் 87 மீட்டர் அகலம் இருக்க வேண்டும். அதனுள் முதல் பிரகாரத்தி னுள் கர்ப்பக்கிரகம் இருக்க வேண்டும்.

இந்தச் சீரமைப்புகளின் போது நான்கு பிர காரத்திற்கும் நுழைவாயிலில் பெரிய கோபுரங்கள் அமைக்க வேண்டும்.

இப்போது முதல் பிரகாரத்தில் தற்போதைய கர்ப்பக்கிரகம், ஆராதனை மண்டபம், சேவா

சாலா, அண்டாவரம் ஆகியவை மகா மண்டபத்தையும் சோபன மண்டபத்தையும் தொடர்ந்து, ஒன்றன் பின் ஒன்றாக அமைந்துள்ளது.

இனி இந்த அமைப்புக்களை அகற்றிவிட்டு எஞ்சுகிற நீள் சதுரமான பிரகாரத்தைக் கர்ப்பக் கிரகத்துடன் இணைத்து சுமார் 90 மீட்டருக்கு 55 மீட்டர் ஆக்க வேண்டும். தங்க விமானத்தை அப்படியே வைத்துக் கொண்டு மற்ற பகுதிகளில் கான்ரீட் தூண்களை அமைத்து மண்டத்தை மிகப் பெரியதாக உருவாக்க வேண்டும்.

தற்போது கர்ப்பக்கிரகத்திற்கு மேலுள்ள தங்க விமானத்திற்கு மேலே கான்ரீட் தூண்களுடன் கூடிய மற்றொரு தங்க விமானம் நிர்மாணிக்க வேண்டும்.

அது விரிவாக்கப்பட்டால், உள்பகுதியை முழுவதுமாக நான்கு மூடிகள் மறைக்கும். இப்படிச் செய்து விட்டால் ஒரே சமயத்தில் மூவாயிரத்திலிருந்து ஐயாயிரம் பக்தர்கள் வரை பகவானை தரிசனம் செய்ய உள்ளே வந்து செல்லும் வழி கிடைத்துவிடுகிறது.

பக்தர்கள் உள்ளே வந்து வேங்கடேசுவரரைத் தரிசனம் செய்து விட்டு வெளி வழியாகச் செல்லலாம்.

மடப்பள்ளி முதல் பிரகாரத்தினுள் இருக்கலாம். மற்ற திருக்கல்யாண மண்டபம் போன்றவைகளை இரண்டாவது மூன்றாவது பிரகாரத்திற்கு மாற்றி விடவேண்டும்.

தேவஸ்தானம் சில புதிய விருந்தினர் மாளிகைகளைத் தேரோடும் நான்கு தெருக்களிலும் நான்கு ஐந்து மாடிக்கட்டடங்களாகக் கட்ட வேண்டும். அங்கிருந்து பக்தர்கள் அவ்வப்போது நடைபெறும் திருவிழாக்களை கண்டு களிக்க முடியும்.

மகாமண்டபம், சோபன மண்டபம், அர்த்த மண்டபம், சேவாதாஸா, அண்டாவரம் முதலியவற்றை மூன்றாவது பிரகாரத்திற்கு மாற்ற வேண்டும்.

குறிப்பிட்ட கூடம் இப்போதுள்ள மகாமண்டபம், சோபன மண்டபம், அர்த்த மண்டபம், சேவா சாலா, அண்டவராம் ஆகியன அடங்கிய பகுதியாகும். அவற்றை அங்கிருந்து மாற்றுவதால் கிடைக்கும் இடத்தில்தான் உத்தேச பெரிய கூடம் அமைக்க வேண்டும், அங்கே பெரிய அளவில் போதிய விளக்கொளி, காற்று வசதி ஆகியவை ஐயாயிரம் பக்தர்களுக்கு ஏற்றதாக இருக்கும்படி அமைக்க வேண்டும்.

புதிய அமைப்பில் பல நுழைவாயில்களில் க்யூ வரிசைகளும், வெளியே வர பல வழிகளும் இருப்ப தால் இப்போது வெங்கடேஸ்வரரை தரிசிக்க, பக்தர்கள் படும் அல்லல்கள் அனைத்தும் அகன்று விடும். நிம்மதியாக, சுகமாக, அதிகநேரம் காத் திருக்காமல், ஏழுமலையானை கும்பிட்டுவிட்டு திருப்தியோடு திரும்பலாம்.

# மதுராந்தகம்-ஏரி காத்த பெருமாள்

"கலெக்டர் துரையவர்களே! ராமர் கோயிலில் ஜனகவல்லி தாயாரின் சந்நிதி திருப்பணிக்கு நீங்கள் உதவ வேண்டிக் கொள்கிறோம்."

"உங்கள் கடவுள் சக்தியுடையவரானால் இந்த மதுராந்தகம் ஏரி உடையாமல் பாது காத்துத் தரவேண்டும், பிறகு பார்க்கலாம்."

சில ஆண்டுகள் சென்றன. ஏரி உடைய வில்லை. மதுராந்தகம் ஏரி தமிழக ஏரிகளிலேயே மிகப் பெரியதொன்றாகும். ஏரிக்கரை இரண்டரை கல் நீளமாகும். இதில் தண்ணீர் தேங்கினால் தண்ணீரின் விஸ்தீரணம் பதின்மூன்று சதுர கற்களாகும். செங்கற்பட்டு மாவட்டம் நெல் விளைச்சலில் உபரியாக விளங்க இந்த ஏரி முக்கிய காரணமாகும். கலெக்டர் மதுராந்தகத்தில் கேம்ப்

போட்டார். இரவில் ஏரியைப் பார்க்கலானார். பெருமழையால் ஏரி நிரம்பியது. கலங்களில் தண்ணீர் பாய்கிறது. கலெக்டர் இரண்டு திவ்விய தேஜோ மயமாய் வில் அம்பு கையுமாக ராமரைக் கண்டார். இது மற்றவர் காண முடியவில்லை. நேரே கோயிலுக்கு சென்றார். வணங்ினார். மதுராந்தகப் பக்தர்கள் இதற்குள் கூடி விட்டனர். அம்மன் சந்நிதியை தனது செலவிலேயே செப்பனிட்டு மீட்டார். இன்றும் சந்நிதி வெளிசுவரில் கல்வெட்டு காணப்படுகிறது. இந்த தர்மம்கும்பினி ஜாதகரர் கலெக்டர் லையோனஸ் பிளேசு துரையால் செய்யப்பட்டதாகும்

இரு நூறாண்டுகட்கு முன்பு செங்கற்பட்டு கலெக்டர் லையோனஸ் பிளேசு. அவர் எதையும் தர்க்கம் செய்யும் பிரிட்டிஷ்காரராவார். அவரை இந்து கடவுளை வணங்க வைத்த வித்தியாசமான கடவுளே, மதுராந்தகம் ஏரிகாத்த ராமராவார்.

தலைமை குருக்கள் ராஜகோபாலாச்சாரியார் தெரிவித்ததாவது:

ராமர், சீதையை மீட்க போகையில் ஆச்ரமங்களில் தங்கிச் சென்றார். விபண்ட மகரிஷி "ராமா நீ திரும்பும்போது என்னிடம் வந்து போ" என்றார். ராமர் திரும்புகையில் நேரே போகலானார். மலை தடுத்து ஞாபகப்படுத்தியது. உடனே சீதையின் கையை லாகவமாக பிடித்தவாறு ராமர்

இறங்கி விபண்டரை வணங்கிச் சென்றார். ஆகவே கருங்குழி மலை ஞானகிரி மலையாயிற்று.

பெரியநம்பிகள் காஞ்சிக்கு வரவும், ராமானுஜர் ஸ்ரீரங்கம் புறப்படவும் இருவருமே மதுராந்தகத்தில் சந்திக்கலானார்கள். ராமானுஜருக்கு பஞ்ச நமஸ்கார தீட்சை பெரியநம்பிகளால் அளிக்கப்பட்டது. மதுராந்தகம் ஏரி காத்த பெருமாள் கோயிலாற்று. ராமானுஜரை ஏரியாக பாவித்து, அந்த ஏரியாக ராமானுஜரை காத்ததனால் ஏரி காத்த பெருமாள் என்று முதலில் ஏற்பட்டது.

பிறகு மதுராந்தகம் ஏரி உடையாமல் காத்ததனால் ஏரி காத்த பெருமாள். அவரே கலெக்டருக்கு ஏரிகாத்த ராமர்.

"லட்சுமிநாதன், கடல், கருணை, நீர், நம்மாழ்வார் மேகம், நாதமுனி பர்வதத்திலே மழை, அந்து உய்ய கொண்டான் மணக்கால் நம்பி அருவிகளாக நதியில் விழ, அது பெரியநம்பிகள் என்ற அணைக்கட்டு மூலமாக ராமானுஜர் என்ற ஏரியில் நிரம்பியது. ஏரியில் இருந்து எழுத்திநான்கு சிம்மாசனாதிபதிகளாகிற 74 மதகுகளால் நம் போன்ற விளைவயல்கட்கு பாய்கிறது!

கருணாகரன், தேவி, ஸ்ரீதேவி, சகிதம் ஏரி காத்த பெருமாளாக நம்மைக் காத்துக் கொண்டிருக்கிறார்.

ராமரோ, சீதை—லட்சுமணர் சகிதம் ஏரி காத்த ராமராக நம்மைக் காப்பாற்றுகிறார். இங்கே ஆடி திருவாடிப்பூரமும், ஆவணி பஞ்ச நமஸ்கார உற்சவமும், முக்கிய உற்சவங்களாகும்,

"மதுராந்தகம், அயங்கொண்ட சோழகளத்தூர் மதுராந்தக சதுர்வேதி மங்கலம்" என்று கல்வெட்டில் குறிப்பிட்டுள்ளது. இது மதுராந்தக சோழனால் அந்தணர்க்கு மானியமாக விடப்பட்டதாகும். மதுரசம் பொருந்திய புண்ணிய தீர்த்தங்கள் உள்ளத்தாலும் இப்பெயர் வலுப் பெற்றதென்பர்.

கோயிலில் பெருமாள் சந்நிதி, அம்மன் சந்நிதி, அனுமான் சந்நிதி, பின்புறம் மிகப்பெரிய ஏரி சென்று பாருங்கள். கும்பிடுங்கள். சென்னை—விழுப்புரம் ரயில் பாதையில் எண்பத்து மூன்றாவது கிலோ மீட்டரில் மதுராநதகம் உள்ளது. நல்ல சாலை இருப்பதால் ஏராளமான பஸ்கள் வசதி உள்ளது.

# திருநீர்மலை-மகாவிஷ்ணு

திருவரங்கம், திருக்கோட்டியூர், திருவேங் கடம், திருநீர்மலை ஆகிய நான்கு தலங்களிலும் எம்பெருமானாகிய மகாவிஷ்ணு நித்தியவாசம் செய்து வருவதாக ஐதீகம்.

திருநீர்மலை, சென்னை—தாம்பரம் நெடுஞ் சாலையில் உள்ள பல்லாவரத்திலிருந்து சுமார் ஐந்து கிலோ மீட்டர் தூரத்தில் இருக்கிறது.

மலையின் மீதுள்ள ஆலயம் மிக அழகாகக் காட்சி தருகிறது.

பூமி மட்டத்திலிருந்து சுமார் அறுபது மீட்டர் உயரமுள்ள திருநீர்மலை மகாவிஷ்ணு கோயி லுக்கு செல்ல படிக்கட்டுகள் உள்ளன.

மலையடிவாரத்திலும ஒரு கோயில் இருக் கிறது. அதற்குப் பின்னால் நீராழி மண்டபத் துடன் கூடிய மணிகர்ணிகா என்ற புஷ்கரணியும், கரையில் ஒரு வசந்த மண்டபமும் இருக்கின்றன.

"அணி திகழும் சோலை அணி நீர் மலை" என்று பூதத்தாழ்வார் குறிப்பிட்டுள்ள மகா

விஷ்ணு ஆலயத்தை மங்களசாஸனம் செய்துள்ளார்.

திருமங்கை ஆழ்வார் முதலில் இந்த ஆலயத்தைத் தரிசிக்க ஆவலோடு எழுந்தருளினார். அப்போது விடாது மழை பொழிந்துக் கொண்டிருந்தது. மழை நீரால் ஏரி நிறைந்து மலையைச் சுற்றி அரண்போல் தண்ணீர் சூழ்ந்திருந்தது. இதன் காரணமாக அவரால் அதைக் கடந்துப் போய் எம்பெருமானை தரிசிக்கச் செல்ல முடியவில்லை. பலநாட்கள் அவர் ஏரிக்கு வெளியிலேயே காத்திருந்தார்.

இப்படியே நாட்கள் மாதங்களான பிறகு நீர் வடிந்தது, அவரால்ஆலயத்தை அடைய முடிந்தது.

இப்படி அடிக்கடி நீர் பிடிப்பு நேரும் காரணத்தினாலேயே இந்த மலைக்கு திருநீர்மலை என்ற பெயர் உண்டானதாக வரலாறு பேசுகிறது.

திருமங்கையாழ்வார் நீர்வடியும் வரையில் தங்கியிருந்த இடமே இன்றுள்ள திருமங்கையாழ்வார்புரம்.

மலையும் ஆலயமும் மிகவும் புராதனமானது.

பல்லவ அரசர்கள் காலத்தில் இந்த ஆலயத்தைக் கட்டினார்கள்.

பல்லாவரம் ரெயில் நிலையத்திற்குச் சற்றுக் கிழக்காக பாண்டவர் மலை இருக்கிறது.

சிறிதுகாலத்துக்கு முன்புபாண்டவர் மலையில் உள்ள பல்லவர் காலத்து குகைக்கோயில் — ஒன்று குடைந்து எடுக்கப்பட்டது. அது நமக்கு பார்க்கக் கிடைத்தது.

குகைக் கோயிலின் உட்புறச் சுவர்களின் பல்லவருடைய விருதுப் பெயர்கள் கல்லில் பொறிக்கப்பட்டுள்ளன. அது மகேந்திர பல்லவ அரசின் காலத்தைச் சேர்ந்ததாகும்.

அதற்கு இணங்க இந்தத் திருநீர்மலையைச் சுற்றிப் பசுஞ்சோலைகள் நிறைந்திருந்தன என்று பூதத்தாழ்வாரின் பாடலிலிருந்து தெரிகிறது.

எம்பெருமான் மலையடிவாரக் கோயிலில் ஒருவராகவும் மலையின் மீதுள்ள கோயிலில் மூவராகவும் எழுந்தருளியுள்ளார்.

"நின்றான் - இருந்தான் - கிடந்தான் நடந்தான்" என்று நான்கு திருக்கோலங்களில் எம்பெருமான் இங்கே நமக்குக் காட்சி தருகிறார்.

திருநீர்மலை-மகாவிஷ்ணு பற்றி வரலாறாகக் கூறப்படுவதாவது:

ஸ்ரீரங்கம் போகும் வழியில் வால்மீகி மகரிஷி இந்தத் தலத்துக்கு வந்து மலைமீதுள்ள ரங்க

நாதன், நரசிம்மன், திரிவிக்கிரமன் என்ற மூன்று மூர்த்திகளையும் கண்டு வணங்கி வழிபட்டார். பின்னர் மலையிலிருந்து கீழே இறங்கி வந்து மலையடிவாரத்திலுள்ள சரஸ்ஸில் கிழக்கு முகமாக நின்று கொண்டு ஸ்ரீராமபிரானை குறித்து தியானம் செய்தார்.

அப்போது ஸ்ரீரங்கநாதன் சக்கரவர்த்தித் திருமகனாக ராமபிரானாகவும், லக்ஷ்மிசீதாப்பிராட்டியாகவும் காட்சி தந்தார்கள். அதேபோல ஆதிசேஷன் லக்ஷ்மணராகவும், திருமாலின் கைகளில் ஏந்தியுள்ள சங்கு-சக்கரங்கள் பரத-சத்ருக்கனாகவும் விஷ்வக்சேனர் சுக்கிரீவனாகவும், கருடன் அனுமாராகவும் காட்சி தந்து மறைந்தார்களாம்.

வால்மீகி மகரிஷி பிரார்த்தித்துக் கொண்டதற்கிணங்க, எம்பெருமான் திவ்வியமான உருவில் நீர்வண்ணப் பெருமானாகக் காட்சி தந்தருளியதாக ஐதீகம்.

ஆலயத்தில் இருநூறடி உயமுள்ள குன்றின் மேல் ஸ்ரீரங்கநாதர் தென்திசை நோக்கி சயனத் திருக்கோலத்தில் காட்சியளிக்கிறார். இந்தச் சயனத் திருக்கோலமோ மாணிக்க சயனம்.

பக்கத்தில் கிழக்குத் திசையை நோக்கிய வண்ணம், தனிக்கோயிலில் ரங்கநாயகித் தாயார் சந்நிதி இருக்கிறது. இது எம்பெருமானது திருக்கோலமாகும்.

திருநறையூரிலே நின்ற திருக்கோலமாகவும் திருவாயிலிலே சிங்கவடிவில் வீற்றிருந்த திருக் கோலமாகவும், திருவரங்கத்திலே பள்ளிகொண்ட கோலமாகவும, திருக்கோவலூரிலே உலகளந்த திருவடி வைத்து நடக்கும் திருக்கோலமாகவும காட்சி தரும் திருமால், அந்த நான்கு வகைத் திருக் கோலங்களிலும் இந்தத் திருநீர்மலையில் காட்சி தருகிறார்.

சுற்றுப் பிரகாரத்தில் பிரகலாதனுக்குக் காட்சி தந்த நரசிங்கமூர்த்தி இங்கே சாந்த மூர்த்தியாக அமர்ந்த திருக்கோலத்தில் காட்சியளிக்கிறார்

நரசிங்கமூர்த்தியின் சந்நிதிக்கு அருகிலேயே "குறளாகி நிமிர்ந்த" உலகளந்த திரிவிக்கிரம மூர்த்தியின் சந்நிதி இருக்கிறது. இது திருமாலின் நடந்த திருக்கோலமாகும்.

வால்மீகி மகரிஷியின் பிரார்த்தனைப்படி மலையடிவாரத்தில் காட்சி தந்த நீர்வண்ணப் பெருமான் காணப்படும் திருக்கோலம் நின்ற கோலமாகும்.

இந்தப் பெருமானை 'நீலமுகில் வண்ணன்' என்றும் ஆழ்வார் குறிப்பிடுகிறார். தாயார் பெயர் அணிமாமலர் மங்கை.

திருநீர்மலை மலையடிவாரத்தில் சக்கரவர்த் தித் திருமகனுக்கு தனிக்கோயில் இருக்கிறது.

திருநீர்மலை மகாவிஷ்ணு குன்றை, ஆழ்வார் "மாமலை" என்று பெருமையோடு குறிப்பிடுகிறார்.

## பழைய சீவரம்-பெருமாள்

பழைய சீவரம் லட்சுமி நரசிம்ம சுவாமி பெருமாள் கோயில் பாலாற்றங்கரையில் செங்கற்பட்டுக்கும் காஞ்சிபுரத்திற்கும் இடையே மெயின் ரோடில் உள்ளது. மலை மீது அமர்ந்து லட்சுமி நரசிம்ம ஸ்வாமி பெருமாள் அருள் பாலித்துக் கொண்டுள்ளனர். பழைய சீவரம் கோயில் இயற்கை சூழலில் அமைந்துள்ளது.

முன்பு குஜராத்திய யாத்ரீகரது வயிற்றுவலி பழையசீவரத்தில் (தங்க நேர்ந்தபோது) குணமானதால் இன்றும் அவர்களின் ஒத்தாசையால் கோயில் நிர்வகிக்கப்படுகிறது. சென்னை ஹரி கிருஷ்ணதாஸ் எச். ஷா, மத்ரதாஸ், ஹரிதாஸ், கோவிந்ததாஸ், புருஷோத்தமதாஸ் ஆகிய பிரபல தொழில் அதிபர்கள் பழைய சீவரம் கோயிலுக்கு செய்து வரும் ஒத்தாசைகள் நம்மை ஆச்சரியப் படவைக்கிறது.

பழைய சீவரம் நரசிம்மர் கோயில் தண்ணீரைப் பருகினால் வயிற்று உபாதைகள் அகலும் என்பது ஐதீகம்.

பழைய சீவரம் தென்னக திரிவேணி சங்கமமாகும், திருமுக்கூடல் இங்குள்ள ஊராகும். இங்கே பாலாறும் செய்யாறும் வேகவதியும் சேர்ந்து ஓடும் காட்சி அற்புதமானதாகும்.

மலை பத்மகிரி, அத்திரி மஹரிஷிக்கு, நரசிம்மர் லட்சுமியோடு காட்சியளித்த ஸ்தலமிது.

பழையசீவர மலை, ஸ்ரீவைகுண்டத்திலிருந்து கச்சியிலிருக்கும் தேவாதி ராஜனுக்கு கிரீடாசலமாக கருடனால் கொண்டு வரப்பட்டதாகும்.

மலைமேல் இங்கு இருந்த வரதராஜர்தான் காஞ்சிக்குச் சென்று வரதராஜராக அருள்பாலிக்கிறார்.

ஆண்டுதோறும் தை மாதம் வரதர் இங்கே வந்து, மலைமேல் தங்கி, பரிவேட்டை, மலை உற்சவம், தோட்ட உற்சவம், வனபோஜனம், நடவாவி உற்சவம் ஆகியன நடத்துகிறார்.

பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பே பல்லாயிரம் ரூபாய் செலவில் கோயில் சீரமைக்கப் பட்டது.

சிறந்த நிர்வாகம், சுத்தமான கோயில் என்று தமிழக அரசின் பாராட்டைப் பெற்றுள்ளது.

கண்ணாடி அறையில் சுவாமியை காணும் போது, முழுக்கோயிலையே நாலாபுறமும் பார்க்க முடிகிறது.

குருக்கள் சுந்தர பட்டாச்சாரியாரும், நிர்வாகி யாக தியாகராஜனும் பழைய சீவரம் நரசிம்ம சுவாமி கோயிலுக்கு சேவை செய்கிறார்கள்.

தமிழ்கிரந்த எழுத்துக்களில் நானூறு ஆண்டு களுக்கு மூந்திய கல்வெட்டுகள் உள்ளன.

பழைய சீவரம் மலையில் லட்சுமி நரசிம்ம சுவாமி கோயில், அதற்கும் மேலே வரதர் இருந்த மண்டபம் உள்ளது. அங்கிருந்து பார்த்தோ மானால் பாலாறு, அதன் பாலம், வயல்கள், மலைகள், சவுக்குத் தோப்பு என அற்புதக் காட்சி களை இங்கே காணலாம். ரயில் ஓடுவது மலைப் பாம்பு போல் காணப்படுகிறது.

லட்சார்ச்சனை பதினோரு நாட்களுக்கு நடக்கிறது. நிறைவாக நரசிம்ம ஜெயந்தி நடை பெறுகிறது.

# சோளிங்கர்-நரசிம்ம சுவாமி

ஆண்டுதோறும் ஜனவரி முதல் தேதி அதி காலை அரக்கோணத்தை அடுத்த சோளிங்கர், யோக நரசிம்ம சுவாமிக்கு படிவிழா. மலை மீதேற 1460 படிகள்.

சின்ன பிள்ளைகட்கு கிருஷ்ண வேடமிட்டு படிப்பாட்டுகள் படிக்கொன்றாக பாடி மலை யேறி கடவுளை கும்பிட்டால் ஆண்டு முழுதும் மன அமைதி கிடைக்கும். நற்காரியம் வெல்லும்.

சோளிங்கர் படித்திருவிழாவுக்கு பலலாயிரம் பேர் வருவர். முதலியாண்ட முதலியார் கட்டளை யிலிருந்து பக்தர்களுக்கு உணவு கொடுக்கிறார்கள். சுவாமியுள்ள கொண்டாபாளையத்தில் 29 சத்தி ரங்கள் உள்ளன. காட்டேஜகள் உள்ளன.

சோளிங்கர் யோகநரசிம்ம சுவாமி யோக ஆஞ்சநேயர் சுவாமி சிறப்புகள் என்ன?

இரணியன் கேள்விகட்கு பிரகலாதன் பொருட்டு தூணிலிருந்து சிம்ம தலையோடு மனித உடலோடு காட்சி அளித்த பிறகு வான

வெளியில் வந்த சமயம் சப்த ரிஷிகளை தொந்தரவு செய்து கொண்டிருந்த ராட்சசனை அழித்த ஸ்தலம் சோளிங்கர். கணநேரத்தில் காட்சி அளித்ததால் கடிகாசலமலை என்றாயிற்று. அதை பெரிய மலை என்கிறோம். அங்கேதான் நரசிம்ம சுவாமி இருக்கிறார் உயர்ந்த கை பக்தர்களை "வா" என்கிறது. அடுத்த கை ரட்சிப்பதற்காக.

சிறிது தொலைவிலுள்ள சின்னமலையில் யோக ஆஞ்சனேயர் இருக்கிறார். அவர் சங்கு சக்கரத்துடன் பக்தர்களை பரிபாலிக்கிறார்.

பில்லி சூனியம், பேய், பிசாசு, மணமாகாதவர், பைத்தியம், குழந்தை இல்லாதவர், கொண்ட பாளையத்துக்கு வந்து தங்கி தக்கான்குள (பிரம்ம தீர்த்தம்) ஸ்நானம் செய்து பெரியமலைக்கும். சின்னமலைக்கும், சென்று 108 சுற்று ஒருநாளைக்கு 2 தடவைகள் சுற்றி (கால்மண்டலம்) 12 நாட்கள் இதேபோல செய்வர். காலையில் சாப்பிடக்கூடாது பிறகு சுவாமி தரிசனம் செய்து தீர்த்தமும் பிரசாதமும பெற்று சாப்பிடலாம். படுக்கையில் படுக்கக கூடாது.

சினிமா கேளிக்கை உதவாது. அரை மண்டலம் (24 நாட்கள்) ஒரு மண்டலம் (48 நாட்கள்) கூட சுற்றவேண்டி நேரிடலாம். இவ்வாறு சுற்றினால் குறை நீங்கிடுகிறது.

இந்த கோயிலோடு தொடர்புடைய பக்தோசித சுவாமியை பிரதிஷ்டி செய்த (400 வருடங்களுக்குமுன்) தொட்டாச்சாரியார் எட்டி மரத்தை தொட்டு பக்தர்களுக்கு கொடுக்க அது இனிய பழமாயிற்று. இதை இன்றும் உற்சவமூர்த்தி சித்திரை பௌர்ணமியில் எட்டி அப்ப வழங்கலால் அறிகிறோம். வைகாசி காஞ்சீபுர கருட சேவை இங்கிருந்தவாறே தொட்டாச்சாரியார் சுவாமிக்கு சேவை செய்வதாக கற்பூர ஆரத்தி காட்டுகின்றனர்.

சோளிங்கபுரம் பச்தோசித சுவாமி கோயிலில் கல்வெட்டுகள் உள்ளன. விலையுயர்ந்த நகை நட்டுகள் ரோஹூர் நம்பெருமாள் செட்டியார் அளித்தார்.

கார்த்திகை ஒவ்வொரு ஞாயிறும் வெள்ளியும் யோக ஆஞ்சநேயரையும், நரசிம்ம சுவாமியையும் சேவித்தால நீண்ட ஆயுள், உடல்நலம், செல்வம், நல்லபிள்ளை, நல்ல புத்தி சித்திக்கும். இந்த ஒரு மாதம் பகவான் விழித்து அருள் தருகிறார்.

ஜனவரி, முதல் தேதி படித்திருவிழாவில் பங்கேற்று யோக கடவுளரை பூஜித்து பேறுகள் கிடைக்கப் பெறுங்கள்.

# படவேடு - ரேணுகாம்பாள்

வெள்ளிக்கிழமை தோறும் பக்தர்கள் கூடும் படவேடு ரேணுகாம்பாள். படவேட்டில் திருநீறு கமண்டலநதி உற்பத்தியாகும் ஸ்தலத்தில் மண்ணில் பூக்கிறது. இங்கே ரேணுகாம்பாளுக்கு முதலில் பூஜை. அம்மன் துஷ்டர்களை அழிக்கிறார். அவர் பக்தர்களை காப்பாற்றிக் கொண்டுள்ளார். எண்ணூற்றி அறுபத்தி இரண்டு வருடங்களுக்குப் பிறகு சமீபத்தில் தான் மகா கும்பாபிஷேகம, காமகோடி சுவாமிகளால் நடந்தது.

ஆண்டுக்கு ஒன்றரை லட்சம் வருமானமுள்ள படவேடு ரேணுகாம்பாள் கோயில் போளூர் மற்றும் வேலூர் வட்டாரத்தில் பிரபல்யமானதாகும்.

வேலூரிலிருந்து படவேட்டுக்குப் போகலாம். போளூர் போகும் ரோடில் சந்தவாசலிலிருந்து நான்காவது கல்லில் படவேடு இருக்கிறது. காட்பாடியில் ரயில் ஏறி ஆரணி ரோடு ரயில்வே ஸ்டேஷனில் இறங்கி ஆரணி படவேடு டவுன் பஸ் ஏறி படவேடு அடையலாம்.

ரேணுகா ஒரு இளவரசி. விதர்ப்ப நாட்டு மன்னன் இரைவதனின் குமாரி. வீரமுள்ள ரேணுகா, மாப்பிள்ளை தேடி நாற்பத்தி நான்கு நாடுகளைச் சுற்றினாள். எந்த இளவரசனும் பிடிக்கவில்லை அவள் தொடர்ந்து முயற்சி செய்தாள். அவள் குண்டலிபுரம் ஜமதக்னி முனிவரை மணந்து கொண்டாள். இவர்கட்கு பரசுராமன் பிறந்தான். ரேணுகா பூஜைக்கு தண்ணீர் கொண்டுவர ஆற்றுக்குச் சென்றாள். தண்ணீர் எடுக்கையில், மேலே போய்க் கொண்டிருந்த கந்தர்வன் அழகில் மயங்கி நின்றாள். இதை ஜமதக்னி அறிந்தார். பரசுராமனை விட்டு தாயின் தலையை சீவிடச் சொன்னார். அவனும் சீவிவிட்டான். அப்படி பரசுராமன் ரேணுகாவின் தலையை சீவிய இடமே வெட்டுவானம். வேலூரி லிருந்து பெங்களூர் போகும் ரோடில் மாதனூர் கோபி இண்டஸ்ட்ரீஸ்மற்றும் சீனிவாச பெருமாள் கோயிலுக்கு இரண்டு கல் முன்பே வெட்டுவானம் உள்ளது.

பரசுராமன், தாயை உயிர்பித்தருள அப்பாவை வேண்டிக் கொண்டார். அவசரத்தில் தலை மட்டும்தான் அம்மாவுடையது கிடைத்தது. எனவேதலை மட்டும் பூமிக்கு மேலேயும், உடம்பு பூமிக்குள்ளேயும் இருக்கும்படி ரேணுகா உயிர் பெற்றாள்.

கார்த்த வீரியன் காமதேனுவை பெற, ஜமதக்னி தலையை அறுததான். ரேணுகா தீயில்

விழுந்தாள். ஆனால் மழை வந்துவிட்டது. ரேணுகா வேகவில்லை. எனவே, வேப்பந்தழை உடம்பில் சுற்றிக்கொண்டு தேறினாள்.

ஜமதக்னி முனிவரை ஆண்டவனிடம் வேண்டி ரேணுகா பெற்றாள். இருவரும் வானுலகம் சென்றனர். ராமரும் அனுமாரும் இலங்கையி லிருந்து திரும்பும் போது, ரேணுகாவை கும்பிட்ட னர்.

அருள்மிகு ரேணுகாம்பாள் கோயிலை ஒட்டி இரண்டு கல் தொலைவுக்குள்ளாகவே ராமர் சீதை லட்சுமணர் ஆஞ்சநேயருக்கு உபதேசம் செய்யும் காட்சியையும் கமண்டல நதி உற்பத்தியாகும் இடத்தையும், ஒன்பதடி உயர தலையாரி சிலையை யும் கண்டு பரவசமடையலாம், கும்பிட்டுத் திரும்ப லாம்.

கமண்டல நதி உற்பத்தியாகும் இடத்தில் மண்ணில் விபூதி பூக்கிறது. அதைத்தான் கோயி லில் கொடுக்கிறார்கள்.

இரண்டரை ஏக்கரில் அருள்மிகு ரேணுகாம் பாள் கோயில் உள்ளது. முகப்பு மண்டபம், கல்யாண மண்டபம், தங்கும் அறைகள் கோயில் விஸ்தரிப்பு ஏற்பட்டுள்ளன. பல கனவான்கள் பண உதவி செய்தனர். அம்மன் மண்டபம் மொசைக்தளம் லட்சுமி - சரஸ்வதி பஸ் அதிபர்,

துணைகாம்பாள். கர்ப்பக்கிருக மொசைத்தளம் ஒண்ணுபுரம் கன்னையன். அம்மன் கோபுரம்- திண்டுக்கல் சௌராஷ்ட்ரா சமூகத்தினர். மூலஸ்தலத்திற்கான பித்தளை தகடுகள் - சிக்மகளூர் கண்ணப்பா. மற்றும் ஆரணி அரிசி மில் அதிபர்களும் ரேணுகா பஸ் அதிபரும் கோயிலை மேம்படுத்திக்கொண்டுள்ளனர்.

## குருவாயூர்—ஸ்ரீகிருஷ்ணன்

ஸ்ரீகிருஷ்ணன் கோயில் நடுமையத்தில் இருக்கிறது. கிழக்கு வாசலில் பெரிய விளக்குத்தூண் நிற்கிறது. கிழக்கு வாசலை 'கிழக்குநடை' என்கிறார்கள். கோயிலுக்கு அருகில் க்ஷேத்ர புஷ்கரணி இருக்கிறது. அதற்கு ருத்ரதீர்த்தம் என்று பெயர்.

ருத்ரதீர்த்தத்தை ஆராட்டு குளம் என்று சொல்கிறார்கள். கோயில் எத்தனை பெரியதோ அத்தனை பெரியதாக இருக்கிறது இந்தக் குளம்.

புஷ்கரணியில் ஆணும் பெண்ணும் தனியாக குளிக்க முடிய துறைகள் இருக்கின்றன, குளித்து விட்டு அங்கிருந்தவாறே பகவதி கோயிலுக்குள் நுழைந்து, பகவதியை தரிசித்துவிட்டு விளக்கு மாடம் வழியாக கோயிலுக்குள் நுழைந்து விடலாம்.

கிழக்குக் கோபுர வாசல் வழியாகவே கோயிலுக்குள் நுழைய வேண்டும். நுழைந்ததும் இருபுறமும் உள்ள திண்ணைகளில் நைவேத்ய சீட்டுகள் தருகிறார்கள். இடது பக்கம் பெரிய தராசு ஒன்று கட்டித் தொங்குகிறது குலை குலையாகப் பலவிதப் பழங்கள், தேங்காய்கள், பலாக்காய்கள், நேந்திரங்காய் எல்லாம் இருக்கின்றன. அதுதான் பிரசித்தி பெற்ற குருவாயூர் துலாபாரம் நடக்கும் இடமாகும்.

திருமணம் சில நிமிஷங்களில் நடந்து முடிந்து விடுகிறது. கோயில் மரியாதைகள் உண்டு. ஆனால் தாலிகட்டிக் கொண்டதும் தம்பதிகளாக இருவரும் சேர்ந்து கோயிலுக்குள் போகக் கூடாது. தனித் தனியாகவே சந்நிதியில் அனுமதிக்கப்படுகிறார்கள்.

ஏராளமானபேர், பல காரியங்களுக்காக 'துலாபாரம்' போடுவதாக வேண்டிக் கொண்டு தினமும் வருகிறார்கள். அவரவர் வேண்டுகோளுக்கேற்ப பொருளைத் தராசில் வைத்து, வேண்டுதல் காரரையும் உட்கார்த்தி வைக்கிறார்கள். பொருள்களுக்கு இத்தனை ரூபாய் என்று கணக்கு உண்டு. அந்தப் பணத்தை ரசீது கொடுத்துப் பெற்றுக் கொள்கிறார்கள்.

குருவாயூர் ஸ்ரீகிருஷ்ண கோயிலின் பெரிய கதவுகள் காலை 2 மணிக்கே திறக்கப்பட்டு விடுகின்றது. அப்போது தரிசிப்பது விசேஷம். அதற்

காக 2மணிக்கே பக்தர்கள் குளித்துவிட்டு வந்து காத்திருக்கிறார்கள். அதற்கு நிர்மால்ய தரிசனம் என்று பெயர். இந்த நிர்மால்ய தரிசனத்தின் போது குருவாயூரப்பன் எத்தனையோ அற்புதங் களை நிகழ்த்தியிருக்கிறான். பக்தர்கள் எத்த னையோ அதிசயக் காட்சிகளை பார்த்திருக் கிறார்கள்.

குருவாயூர் கோயிலில ஒவ்வொரு நாளும் திரு நாள்தான்; ஒவ்வொரு நாளும் கோலாகலமான திருவிழாதான்:

குருவாயூர் கோயிலில், பகவானுக்கு சாயங் காலம் மட்டும்தான் தீபாராதனை செய்கிறார் கள். ஆனால் அதுவே பார்க்க கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும் ஏழு அடுக்கு விளக்கு, ஐந்து திரி நாகப்பட விளக்கு, ஒற்றைத் திரி விளக்கு என்று பல விளக்குகள் ஏற்றி ஆராதனை செய் வார்கள். கடைசியில் கற்பூர ஆரத்தி நடக்குமட.

அதற்கு சற்று முன்தான், குருவாயூரப்பனை மோகனமாக அலங்கரித்திருப்பார்கள். சந்தனக் காப்பும், குண்டலங்களும், கடகங்களும், கிரீடமும் துளசி மாலைகளும் அணிந்து கண்ணன் எழிலே வடிவாக நின்று தீபாராதனை அங்கீகரித்துக் கொள்கிற காட்சியிருக்கிறதே அதற்கு நிகரே கிடையாது.

அப்போது திருப்புகை என்று ஒன்று போடுகிறார்கள். எட்டுவித மூலிகைகளின் பொடியினால் எழுப்பப்படும் அந்தப் புகை மருத்துவ குணம் உடையது; அதை நுகர்ந்தால் நோய் அணுகாது; கிருமிகள் அழிந்துவிடும்.

கிருஷ்ண காவியம் பிரசித்தி பெற்ற நாராணீயம்

ஆயுள் ஆரோக்யம் சௌக்யம்" என்று அதன் கடைசிப் பாட்டு தொடங்குகிறது. அதைப் பாடி முடித்ததும பட்டத்திரியில் பேரற்புதம் நிகழ்ந்தது. அவரைப் பிடித்த வாதநோய் மாயமாய் மறைந்து விட்டது.

1586-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 27-ந்தேதி பட்டத்திரி நாராணீயத்தை எழுதியதாகச் சொல்கிறார்கள் நாராயணீயம் இன்று உலகமறிந்த இதிகாசமாகி குருவாயூரப்பனின் புகழை எங்கும் பரப்பிக் கொண்டிருக்கிறது.

இன்று குருவாயூர் கோயில், இந்தத் திருப்பணிகளால் புதுப்பொலிவுடன் நிஜமாகவே பூலோக வைகுண்டம் போல காட்சி அளிக்கிறது. வடக்கு, தெற்கு, மேற்கு விளக்கு மாடச்சுவர்கள் யாவும் கருங்கல்லில் அமைந்து பளப்பளக்கிறது. கல்சுவர்களைச் சார்ந்த பிரகாரத்தில் 52 கம்பீரமான கருங்கல் தூண்கள் எழுந்திருக்கின்றன. ஒவ்வொரு

கல் தூணிலும் ஒரு அழகிய தெய்வம் அல்லது பக்தி மானின் சிற்பம் நிற்கிறது.

குருவாயூர் கோயிலின் பெரிய பிரகாரத்தில் ஒவ்வொரு நாளும் பலர் அங்கப் பிரதட்சணம் செய்வதைக் காணலாம்.

குருவாயூரப்பனுக்குப் பலவிதமான அபிஷேகங்கள் செய்யப்படுகின்றன. அவையாவன: பால், இளநீர், பன்னீர், பஞ்சகவயம், சந்தனம்.

குருவாயூர் கோயிலில் களபம் சார்த்துதல் முக்கியமான அம்சமாக இருக்கிறது. சந்தனம், கற்பூரம், பன்னீர், குங்குமப்பூ ஆகிய நற்பொருள்களை கலந்து அரைத்து எடுப்பது களபம். இதை மூல விக்கிரகத்தின் மீது அப்புவதே களபம் சார்த்துதல். இப்படிச் சாத்தப்பட்ட களபத்தைப் பக்தர்கள் விசேஷமாகக் கருதி பூசிக்கொள்கிறார்கள்.

குருவாயூர் கோயிலில் அழகுப்படுத்தும் பொருள்களை "ஆடம்பரம்" என்று குறிக்கிறார்கள். யானைகளில் இருந்து விளக்கு, எண்ணெய் வரை இந்த இனத்தின்கீழ் காணிக்கையாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

குருவாயூர்க் கோயிலுக்கு ஆடம்பரமாக படங்கள், விளக்குகள், கூரை வேய தங்கத் தகடுகள், விளக்கு ஏற்றும் எண்ணெய், பசுக்கள், குதிரைகள்,

மான்கள், மயில்கள் எல்லாம் கூட வருகின்றன. இசைக் கருவிகளும அளிக்கப்படுகின்றன.

கதகளியாக கிருஷ்ணாட்டம் என்கிற கதகளி எட்டு பிரிவாகப்பிரிக்கப் பட்டு ஒவ்வொரு நாளிரவுக்கும் ஒரு பகுதி என்று எட்டு நாள் நடத்தப்படுகிறது. ஆடி, ஆவணி மாதங்கள் தவிர மற்ற மாதங்களில் பெரும்பாலான நாட்களில் கோயிலில் இது இருக்கும். பக்தர்களே இந்த எட்டு பிரிவுகளில் எது வேண்டுமோ அதை தேர்ந்தெடுத்து உரிய கட்டணத்தை காணிக்கையாக செலுத்தி நடத்தி வைக்கலாம்.

குருவாயூர் கோயிலுக்கு போகிறவர்கள் 48 மணி நேரமாவது அங்கே தங்கி, கோயிலின் எல்லா நிகழ்ச்சிகளையும் பார்க்க வேண்டும். இரவு வரை பலவித பூஜைகள் நடந்துக்கொண்டே இருக்கும. பல்வேறு விதமான துலாபார காணிககைகள் செலுத்தப்படுவதைப் பார்க்கலாம். இரவில் யானைகளுடன் விளக்கு பூஜை பவனியை 'மிஸ்' பண்ணக்கூடாது.

சுகமான ரெயில் பாதை மூலம் சென்னை-திருச்சூர் சென்று பஸ்ஸில் குருவாயூர் போகலாம். பஸ்ஸிலும் நேரே குருவாயூர் போகலாம். கிருஷ்ணனின் திருக்கோலத்தைக் கண்டு திருப்தியோடு திரும்பலாம்.

# திருவண்ணாமலையில்- அண்ணாமலையார்

உலகத்திலேயே மிகவும் உயரமான கோபுரத்தைக் கொண்டது.திருவண்ணாமலை அருணாசலேசுவரர் திருக்கோவிலாகும், (217 அடி உயரம்) இக்கோயிலில் ஆயிரக்கால் மண்டபம், சிவகெங்கை விநாயகர் ஆலயம், சிவகெங்கைத் தீர்த்தம் ஆகியவைகள் உள்ளன. இங்குள்ள வல்லாள மகாராஜன் கோபுரத்திலிருந்து அருணகிரிநாதர் கீழே விழ முருகப்பெருமாள் தாங்கிக் கொண்டார். அவர் இக்கோபுரத்தின் வடபால் கோயில் கொண்டுள்ளார். அதையடுத்து பிரம்மதீர்த்தமும் சக்திவிலாச சபையும் உள்ளன. அருணகிரிநாதர் கிளியாக இருந்து கந்தரனுபூதி பாடினார் என்பதை நினைவூட்டும் வகையில் கிளி உருவமுள்ள கிளிக்கோபுரம் இருக்கிறது.

ஆண்டவனே மனிதனுக்கு மகனாகப பிறந்து அப்பாவுக்கு ஈமச்சடங்கு செய்வது 'அண்ணாமலையாரிடம் உண்டு,மாசிமகம், பள்ளிகொண்டப்பட்டியில் நடைபெறுகிறது. கார்த்திகை நட்சத்திரத்தன்று மாலை 6 மணிக்கு பஞ்சமூர்த்திகள் மண்டபம் வந்திருக்க ஐந்து அர்ச்சகர்கள் தீபாரா

தனை காட்ட மலையுச்சியில் தீ ஜுவாலை எழும் பும் காட்சியையும் "அண்ணாமலைக்கு அரோ கரா!" என்று இலட்சோப இலட்சம் மக்கள் பய பக்தியுடன் குரல் எழுப்பும் காட்சியையும் காட்சி யையும் காண கண்கோடி வேண்டும்.

இது பஞ்ச பூத ஸ்தலங்களில் தேயு தலம் நினைக்க முக்தியளிக்கும் நிர்மல க்ஷேத்திரம். சிவபெருமான் வல்லாள மகாராஜனுக்கு புத்திர ராய்த் தோன்று அநுக்ரஹித்த தலம். "யான்பரம" "யான்பரம்" என்று தரிசித்த பிரம்மா விஷ்ணுக் களுக்கு முன் சிவபெருமான் அக்கினி மலையாய்த் தோன்ற, அவர்கள் அன்னமாயும், பன்றியாயும் சென்று முடியையும் அடியையும் தேடிக் காணாமல் அகந்தை தீர்ந்து திகைத்து நிற்கத் தாமே பரம் பொருள் என்று ஸ்தாபித்த தலம் திருவண்ணா மலை. எனவே இந்த ஐதீகத்தைக் கொண்டு ஆண்டுதோறும் கார்த்திகை மாத கிருத்திகையில் தீப தரிசன உற்சவம் நடைபெறுகின்றது.

திருப்புகழ் பாடிய அருணகிரிநாத சுவாமி களுடைய ஜனன பூமியும் இதுவாகும். இக்கோவி லில் அவருக்கென்று தனிச் சன்னதியும் இருக்கிறது.

25 ஏக்கரில் அமைந்துள்ள இந்த அருணாச லேசுவரர் கோவில் மலையைச் சுற்றி வந்தால் பிள்ளைப்பேறு உண்டாகும்.

## மதுரை To பிலடெல்பியா

மதுரையைச் சேர்ந்த மதனகோபாலசுவாமி யின் சில பகுதிகளை 100 ஆண்டுகட்கு முன்பு ஏலம் விட்டபோது ஓர் அமெரிக்கப் பெண்மணி அவற்றை வாங்கி நெம்பர் போட்டு அமெரிக்கா வுக்கு கப்பலில் அனுப்பி அங்கே கொஞ்சமும் நிலை மாறாமல் அவற்றைத் திரும்ப இணைக்கச் செய்து பிலடெல்பியா ஆர்ட் மியுஸியத்துக்குத் தந்திருக் கிறார். "அங்கே போனால் நம்முடைய ஊர் கோயிலுக்குள் நுழைந்த மாதிரியே இருக்கிறது." என வியக்கிறார் நேரில் கண்ட மதுரை டாக்டர் என். சுப்பைய்யா; மத்திய அரசாங்க கள விளம் பரத்துறை அதிகாரி என். ரங்கநாதனின் சகோதரர்.

# வடலூர்—ராமலிங்கம்

திருவருட் பிரகாச வள்ளல் ராமலிங்கம் 1823 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் ஐந்தாம் தேதி சிதம்பரத்தை அடுத்த மருதூரில் பிறந்தார்.

இராமய்யா சின்னம்மை தம்பதிகளுக்கு இராமலிங்கம் ஆறாவது பிள்ளை.

ஆறாவது பிள்ளையான ராமலிங்கத்தின் குழந்தை பருவத்திலேயே தந்தை மறைந்தார்.

சின்னம்மை மருதூரைவிட்டு நீங்கி சின்னக்கா வனத்தை அடைந்து சிறிது காலம் வாழ்ந்தார். 1924-ஆம் ஆண்டு சென்னையில் தம் மக்களுடன் நிரந்தரமாகக் குடியேறினார்.

இராமலிங்கத்தின் மூத்த சகோதரர் சபாபதி பிள்ளை, அப்போது சென்னையில் புகழுடன் விளங்கிய பெரும்புலவர் காஞ்சி சபாபதி முதலியாரிடம் தமிழ்க்கல்வி பயின்று புராண பிரசங்கத்தில் வல்லவனார். சபாபதி பிள்ளை தன் தம்பி இராமலிங்கத்தையும் சிறந்த தமிழ்ப் புலவராக்க எண்ணினார். தாமே அவருக்குச் சிறந்த தமிழ் நூல்களைப் போதித்து வந்தார்.

இராமலிங்கம் தனது ஏழாவது வயதிலேயே அறிவில் சிறந்து விளங்கினார். இறைவனிடம் அன்பு செலுத்தத தொடங்கினார். நல்லொழுக்கச் சீலராக விளங்கிய இராமலிங்கம் தமது ஒன்ப தாவது வயதிலேயே கவி பாடினார்.

இவர் நாள்தோறும் கோவிலுக்கு போவார். கவிகள் பாடுவார்.

இறைவனை வணங்குவது. இன்சுவைக் கவிகள் புனைவது. தமிழ் கற்க விரும்புவோர்க்கு, தமிழ் கற்பிப்பது. ஐயமுற்றுக் கேள்விகள் கேட் போர்க்கு விளக்கம் சொல்வது. இது போன்ற செயல்களிலேயே அவர் எப்போதும் ஈடுபட்டார்.

சென்னை கந்தக்கோட்டத்துக்குச் செல்வார். கந்தக்கோட்டத்து முருகன் மீது பாடுவார்.

இவ்வாறு அன்பு நெறியிலேயே கவனம் செலுத்தி வந்தார் அவருக்கு பணம், குடும்ப வாழ்வு, எதிலும், சிறிதும் ஆசை இருக்கவில்லை.

இந்த நிலையில் அன்னையும், அண்ணனும் இவரைத் திருமணம் செய்து கொள்ளும்படி வற்புறுத்தினர். அக்காள் பெண்ணையே திருமணம் செய்து வைத்தனர். பெயருக்குத்தான் திருமணம். மணவாழ்க்கையில் இவர் ஈடுபட வில்லை. விரைவிலேயே இல்லம் விட்டு நீங்கி தனியாக சிதம்பரத்திற்குச் சென்று வாழ்ந்தார்.

சுவாமி பாடல்கள் திருவருட்பா என்னும் பெயரில் வெளிவரத் தொடங்கின.

இராமலிங்கர் 1858 ஆம் ஆண்டு வடலூர் வந்தார். வடலூரை அடுத்த கருங்குழியில் தங்கி யிருந்தார். அப்போது அவருக்கு வயது நாற்பத்து ஐந்து.

அப்போது வடலூருக்கு பார்வதிபுரம் என்று பெயர். அங்கு இருந்து பார்த்தால் சிதம்பரம் கோயிலின் நான்கு கோபுரங்களும் தெரியும்.

சிதம்பர நடராஜர் கோயிலை புதுப்பித்து அதை முன் போலவே எல்லா மதத்தினரும்

வணங்கும் பொதுக்கோயில் ஆக்கும் திருப்பணியில் ஈடுபட்டார். இறைவனுக்கு வடலூரில், அருட் பெருஞ் ஜோதிக்கு, ஞானசபை அமைத்தார். ஞான சபையைக் கட்டிய அந்த ஊர். வடு+அல்+ஊர் = வடலூர் குற்றம் இல்லாத ஊர்.

வடலூரில் 1865-ஆம் ஆண்டு சமரச சன்மார்க்க சங்கத்தை நிறுவினார். 1867-ல் சத்திய தருமச்சாலையை அமைத்தார். தருமச்சாலையில் கூட்டம் பெருகவே பக்கத்து மேட்டுக்குப்பம் கிராமத்தில் போய் சித்திவளாகத் திருமாளிகையில் 1870-ஆம் ஆண்டு முதல் தங்கியிருந்தார்.

இந்தச் சமயத்தில் வள்ளலாரை மக்கள் தெய்வமாகவே எண்ணத் தொடங்கி விட்டார்கள். வள்ளலார் சொல்வதைக் கேளுங்கள்:

"இராமலிங்க சுவாமி என்று வழங்குவது எனக்கு சம்மதம் அன்று. என்னை ஆரவாரத் திற்கு அடுத்த பெயராகத் தோன்றுதலின் இனி அங்ஙனம் வழங்காமை வேண்டும்.

தெய்வத்தைத் தெரிந்துக் கொள்ளாது இவ் வுலகத்தார் என்னைத் தெய்வம் என்று சுற்று கிறார்கள். ஐயோ! நம் சகோதரர்கள் தெய்வத் தைத் தெரிந்து கொள்ளாததனால் அல்லவோ நம்மைச் சுற்றுகிறார்கள் என்று உள்ளும் புறமும்

பரிதாபப்பட்டுக் கொண்டிருந்தேன்; இருக்கிறேன்; இருப்பேன்."

1871 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 25 ஆம் நாள் தைமாதம் 13ஆம் நாள் வியாழக்கிழமை அன்று தைப்பூச நன்னாளில் வடலூரில் தாம் கட்டிய சத்திய ஞானசபையில் முதன்முதலாக அருட்பெரும் ஜோதி தரிசனத்தைக் காட்டுவித்தார்.

1873 ஆம் ஆண்டு தம் சன்மார்க்கக் கொள்கைக்காக மஞ்சளும், வெள்ளையும் கொண்ட சன்மார்க்கக் கொடியை ஏற்றி பேருபதேசம் செய்தார்.

1874 ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 30 ஆம் நாள் வெள்ளிக்கிழமை இரவு 12 மணிக்கு சித்தி வளாகத் திருமாளிகையில் இருந்த தமது அறைக்குள் புகுந்து கதவைத் திருக்காப்பிட்டுக் கொண்டார்.

வள்ளலார் 'அருட்பெரும் ஜோதி! அருட்பெரும் ஜோதி! தனிப்பெரும் கருணை! அருட்பெரும் ஜோதி!' என்னும் மகாமந்திரத்தை உலகுக்கு வழங்கியிருக்கிறார்.

"சன்மார்க்கத்தின் முடிவுசாகாமல் இருத்தலே. சாகாதவனே சன்மார்க்கி. என் மார்க்கம் இறப்

பொழிக்கும் சன்மார்க்கம்" என்பது வள்ளலார் வாக்கு.

வள்ளலார் சுத்ததேகம், பிரணவதேகம், ஞான தேகம் என்ற மூவகை தேக சித்திகளையும் பெற்றவர். வள்ளலார் நித்ய தேகத்துடன் வாழ்ந்து வருகிறார்.

## சோழன் பாறை—பிள்ளையார்

மலைமேல் பிள்ளையார் கோயில் இரண்டு இடங்களில் உள்ளன. ஒன்று திருச்சி உச்சிப் பிள்ளையார். மற்றது திருச்சி உறையூர் சோழன் பாறை பற்றிய தகவல்:

ராஜகுமாரி உப்பரிகையில் உள்ளாள். பூங்கா உப்பரிகையைச் சுற்றி ஓடும் ஆற்றுக் கரையில் உள்ளது. தானே தங்கத்தாலான குடத்தினால் தண்ணீர் மொண்டு ஊற்றி வளர்த்த பூச்செடிகள் பல. ஒரு நாள் குடம் கைதவறி ஆற்றோடு போகிறது. குடுகுடு கிழவர் காணப்படுகிறார். தாத்தா, இந்த குடத்தைப் பிடியுங்கள். அதோ, என்று கத்தும் குமாரி, குலுங்கும் அழகுக்கு அதிபதி. கிழவர்க்கோ பேராசை. இவளை மணக்க மோகம். 'என்னைக் கல்யாணம் செய்து கொள்ள சம்மதித்தால் எடுத்துக் கொடுக்கிறேன்' என்றார்.

வேறு வழியில்லாமல் ஒப்புக் கொள்கிறாள்; குடம் கிடைக்கிறது. திருமணம் நடக்கிறது. கிழவன் வேறு யார்? மகாவிஷ்ணு. ராஜகுமாரி-கரிகாற் சோழனின் குமாரி கமலவல்லி.

இந்த நிகழ்ச்சி மட்டுமா? கரிகாற்சோழன் அரண்மனை தேவி வேண்மாளின் அந்தப்புரம். கமலவல்லியின் உப்பரிகை அவர்கள் கும்பிட்ட முத்தி விநாயகர்—பாதாள லிங்கேசுவரர், அத்தனையும் உள்ள இடமே திருச்சி-உறையூரை அடுத்துள்ள சோழன்பாறை வட்டாரத்தில் அமைந்துள்ளது. சுரங்கப் பாதைகள் பல உண்டாம். மலை கோட்டைக்கு போகலாம் அரண்மனைக்கும் போகலாம். அந்தப்புரத்தை அடையவும் முடியும். பாறையை அடுத்த ஆற்றில் ஆழம் பனை மரத்தருகே அதிகம். இதுவரை யாரும் ஆழம் காண முடியவில்லை. அங்கே ஒரு சுரங்க வழி. பாறை மேல் மண்மூடிக் கிடக்கின்றதே அங்கே ஒரு சுரங்க வழி. இன்னொன்று ஈச்சமரத்தின் அருகே இருக்கலாம்.

உறையூர் யானையை கோழி வென்ற கோழி மாநகர். சோழர் தலைநகர். குடமுருண்டதால் குடமுருட்டி ஆறு என்றழைக்கின்றனர். அரண்மனை இருந்த இடத்தில் நாடா மில் உள்ளது. உப்பரிகை மண்மேட்டிலுள்ளது. உப்பரிகை முத்தி விநாயகர் கோயில் இருக்கும் பகுதியாகும். நான்

போனபோது நான்கு டூரிஸ்ட் பஸ்களில் நூற்றுக் கணக்கானோர் வந்து பார்த்ததைக் கண்டேன். வரதராஜபுரம் மக்கட்கு குலதெய்வம் முத்து விநாயகர் பாதாள லிங்கேசுவரர் புதையுண்டு இருக்கக்கூடிய இடமாக சலவை தொழிலாளி காட்டிய இடம் உள்ளது. இவை மண்மேடிட்டுப் போக என்ன காரணம்? மலைக்கோட்டை கோயில் பூங்கா மலர்களை ராணி பறித்தாள். சாமியார் முறையீட் டால் மண்மாரிப் பெய்து மண் மேடிட்டுப் போயின. ஆனால் முதது விநாயகர் மட்டும் உள்ளார்.

சமீப காலமாக புகழடைந்து வருகிறார். பாறை கல்வெட்டு மழை வெயயிலால் கெட்டுப் போயுள்ளது. பத்துவகைப பூ, நெல்லி இலை, அருகம்புல் சாற்றி தினமும் பூஜை. தமிழ் மாதப் பிறப்பு அன்று விழா நடக்க பஞ்சநாதன், ராஜு, நடராஜன், தட்சிணாமூர்த்தி, காமராஜ் ஆகிய பக்தர்கள் உழைக்கிறார்கள். பாதாள வழி உள்ள இடத்தில் ஆற்றில் பலர் அடிக்கடி சாவது உணடு. விநாயகர் பூஜையால் சாவே இலலை என்று பஞ்ச நாதன் சொல்கிறார். உண்மையும் அதுதான். உறையூர் சோழன்பாறை விநாயகர் மலை மேலிருந்து மக்களை காவல் செய்து கொண் டுள்ளார்.

# சபரிமலை—ஐயப்பன்

கார்த்திகை மாதம் முதல் தேதி ஆரம்பித்து மண்டலத்துக்கும் மகர விளக்குக்கும் லட்சக்கணக் கான ஐயப்ப பக்தர்கள் ஆண்டு தோறும் சபரி மலைக்குச் செல்கிறார்கள்.

சபரிமலைக்குச் செல்பவர்கள் கறுப்புநிற வேட்டி, துண்டுகளையே கட்டாயம் அணிய வேண்டும். கழுத்தில் உத்திராட்ச மாலை அணிய வேண்டும்.

மண்டல, மகர விரத காலத்தில் அனுசரிக்க வேண்டிய இன்னொரு முக்கியமான விரதம் பிரமச்சரியமாகும்.

மகர சங்கரமம் என்றொரு விசேஷம் உண்டு. மகர மாதம் (தை) ஏழாம் தேதி வருகிறது. ஐயப்ப பக்தர்கள் பிரம்மச்சரிய விரதத்தை அன்றுதான் முடிக்க வேண்டும். விரத நாட்களில் சத்தியம்; தர்மம், பிரம்மச்சரியம் காக்க வேண்டும்.

உண்மையான ஐயப்ப பக்தர் எந்த நேரத் திலும் சேவா மனப்பான்மையுடன் உள்ளவரா வார். அவர் பலமுறை மலை ஏறி இறங்கிய

அனுபவசாலியான ஒருவரை குருசுவாமியாக ஏற்பார். அவர் தலைமையில் செல்லும்போது அவருடைய சேவையிலும் உபசரிப்பிலும் ஏற்படும் அளவிலாத திருப்தியை அடைவார். இந்த ஆத் மானந்தத்திற்கு ஈடே கிடையாது.

சபரிமலைக்குப் போக விரும்புபவர்கள் விரத மிருந்து இருமுடிக் கட்டி தூக்கிப் போக வேண்டும் என்று விதித்திருக்கிறார்கள்.

ஒரே துணியை இரண்டு பைகளாகச் செய்து இரண்டிலும் பயணத்திற்கும் ஐயப்ப சுவாமியின் நிவேதனத்திற்குமான பொருள்களை நிரப்பிக் கட்டி, அதைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு போவதுதான் இருமுடி.

இருமுடியில் ஒரு பகுதியில், சபரிமலையில் வழிபாடு செய்வதற்கான பொருள்களும், பின் பகுதியில் பக்தனின் உபயோகத்திற்கான பொருள் களும் இருக்கும்.

பையைத் தலையில் முன் பக்கம் ஒரு பாதியும் பின் பக்கம் ஒரு பாதியுமாக வைத்துக் கொண்டு நடப்பார்கள்.

இருமுடிப் பைக்கு மூன்று முழம் துணி தேவை. நீளத்தில் மடித்து நடுப்புறம் ஓரடி நீளம் தைக்க வேண்டும். இந்தப் பையைத் தைக்க கன்னி ஐயப்ப

பக்தர்கள் வெள்ளைத் துணியும் மற்றவர்கள் கருப்புத் துணியையும் உபயோகிக்க வேண்டும்.

முதிர்ந்த தேங்காய் ஒன்றை எடுத்து அதன் பெரிய கண்ணைத் துளைத்துத் தேங்காயினுள் இருக்கிற தண்ணீரை வெளியில் ஊற்றினப் பிறகு சுத்தமான பசுவின் நெய்யைச் சூடு பண்ணி அதில் மெதுவாக ஊற்ற வேண்டும். பிறகு கார்க்கை அடைத்து அதன் மேல் அரக்கைச் சூடு பண்ணி ஊற்ற வேண்டும்

இரண்டரை ஆழாக்கு அரிசி, நெய், அபிஷேகத் தேங்காயைத் தவிர மேலும் 4 தேங்காய்கள்—அதாவது, பம்பையில் கணபதிக்கு உடைப்பதற்கு ஒன்று, சபரி பிடத்தில் ஒன்று, பதினெட்டாம்படி ஏறும்போது ஒன்று, மாளிகைப் புறத்தம்மனுக்கு உருட்டுவதற்கு ஒன்று—இது தவிர சந்தனம், விபூதி, குங்குமம், பன்னீர், ஊதுவத்தி, சாம்பிராணிப் பொடி, வெற்றிலைப் பாக்கு, பழம், வெல்லம், நெல்பொரி, மஞ்சள் பொடி, திராட்சைப் பழம், கற்கண்டு, மிளகு, மாளிகைப்புறத்தம்மனுக்கு ஒரு பட்டுத் துண்டு இத்தனைப் பொருள்களையும் சேமித்துக் கொள்ள வேண்டும்.

இந்தப் பொருள்களெல்லாம் இருமுடிப் பையினுடைய முன் பக்கம் சேர்க்க வேண்டியவையாகும். பையினுடைய பின் பக்கம் சொந்த தேவைக்கு வேண்டிய உணவுப் பொருள்கள்

துணி, கத்தி, உணவு தயாரிப்பதற்கான பாத்திரங்கள், சின்னக் குத்து விளக்கு முதலியவற்றை வைக்க வேண்டும். இத்துடன் தலையில் வைத்துக் கொள்வதற்கு ஒரு போர்வையும் வேண்டும்.

இருமுடிப் பையில் சேர்க்க வேண்டிய நெய்த் தேங்காயை நிறைப்பதும் குரு சுவாமிகள்தான் செய்ய வேண்டும். அச்சமயத்தில் மாதா பிதாக்களும் பந்துமித்திராதிகளும் உடன் இருக்க வேண்டும்.

இருமுடிப் பையை நிறைக்கும் போது ஸ்ரீ கணபதி, ஸ்ரீ சுப்ரமணியர், ஸ்ரீ ஐயப்பன், ஸ்ரீ மகேசுவரன், ஸ்ரீ மகாவிஷ்ணு முதலிய தெய்வங்களை வழிபட வேண்டும். சரணம் சொல்ல வேண்டும். மாதா பிதா மற்றும் குரு சுவாமிகளுக்குத் தட்சணை கொடுக்க வேண்டும்.

மாதா பிதாக்களை மறுபடி வணங்கின பிறகு குரு சுவாமிகள் தலையில் வைத்துத் தருகிற இருமுடிக் கட்டுடன் கிழக்கு நோக்கி சுவாமிகளுக்குப் பின்னால் திரும்பிப் பார்க்காமல் "சுவாமியே சரணம் ஐயப்பா!" என்று சொலலிக் கொண்டு நடந்து செல்ல வேண்டும்.

ஸ்ரீ சபரிமலைப் புனித யாத்திரையின் மிக முக்கியமான கட்டம் ஐயப்ப பக்தர் எருமேலி என்ற இடத்திற்கு வந்தவுடன் ஆரம்பமாகிறது.

எருமேலியில் இருந்து மலை மீதுள்ள ஸ்ரீ சுவாமி சந்நிதானம் வரையில் ஐயப்ப பக்தர்கள் வணங்கி, சரணம் கூவி, வழிபாடி செய்யப் பல புண்ணியத் தலங்கள் இருக்கின்றன. அவையாவன:

எருமேலி தர்ம சாஸ்தா சந்நிதி, எருமேலி வாலிர் சந்நிதி, இஞ்சிப் பாறைக் கோட்டை, கொச்சுக்கடுத்த சுவாமி வழியாக பம்பா நதிக்கு வந்து நீராடி பிறகு தர்ப்பணம் செய்த பிறகு குரு தட்சணை, அன்னதானம், பம்பை விளக்கு முதலியவை நடத்தி விட்டு மேலே போவார்கள்.

பம்பை நதிக்கரையில் ஸ்ரீ மகா கணபதி, ஸ்ரீ ராமர், ஸ்ரீ ஹனுமார் கோயில்கள் இருக்கின்றன. கணபதி கோயிலில் தேங்காய் உடைத்துக் கற்பூரம் ஏற்றி தரிசனம் செய்த பிறகு ராமர் கோயிலிலும் அனுமார் கோயிலிலும் தரிசனம் செய்வார்கள்.

பம்பா நதிக்கரையில் இருக்கிற பந்தள ராஜாவினுடைய ஆசிரமத்திற்கு வந்து வணங்கிய பிறகு காணிக்கை செலுத்தி விபூதி வாங்கி நெற்றியில் பூசிக் கொண்டப் பிறகு தான் நீலிமலை ஏறுவார்கள்.

பிறகு அப்பாச்சிக்குழி இப்பாச்சிக்குழி என்ற இடங்கள் வரும். சுவாமியுடைய பூத கணங்களான வாபரன், கடுவரன், வீரபத்ரன், உபகர்ணன்

கண்டா கர்ணன், கபகருத்ரன் முதலியவர்களில் முக்கியமான கடுவரால் துர்ப்பூதங்களும் துர்த் தேவதைகளும் இங்கு அடக்கி வைக்கப்பட்டிருக் கின்றன. கன்னி ஐயப்ப பக்தர்கள் குரு சுவாமி களுடைய கட்டளையை அனுசரித்து இந்த இடத் தில் அரிசி மாவு உருண்டையும், வெல்ல உருண்டை யும் இந்தக் குழிகளில் போடுவார்கள்.

அடுத்தது சபரி பீடம். இது முக்கியமான ஆராதனை இடம். ஐயப்ப பக்தர்கள் வலம்வந்து தேங்காய் உடைத்துக் கற்பூரம் ஏற்றி வந்தனம் செய்வார்கள்.

பின்னர் சரங்குத்தி ஆல்துறைக்கு வந்து கன்னி ஐயப்ப பக்தர்கள் குரு தட்சிணை வழங்கின பிறகு இங்கே சரக்கோல் குத்துவார்கள்.

இதன் பின் ஸ்ரீசந்நிதானம் தான். ஸ்ரீசந்நி தானம் வந்ததும் ஐயப்ப பக்தர்கள் தாங்கள் கொண்டு வந்திருக்கிற நெய்த் தேங்காயை உடைத்து நெய் பகிர்ந்து ஸ்ரீ ஐயப்ப சுவாமிக்கு அபிஷேகத்திற்குக் கொடுப்பார்கள்.

அபிஷேகம் செய்து கிடைக்கிற நெய்யைப் பிரசாதமாக ஏற்பார்கள்.

மலை மீது, ஐயப்ப சுவாமி கோயிலை அடுத்து பல சிறு கோயில்கள் உள்ளன. அதில் ஸ்ரீமகா

கணபதி சந்நிதியில் நெய்த்தேங்காயின் ஒரு துண்டை ஸ்ரீகணபதி ஹோம குண்டலத்தில் போட்டுவிட்டு ஸ்ரீசண்முக சுவாமி சந்நிதிக்கு வருவார்கள். பன்னீர், சந்தனம், ஊதுவத்தி, கற்பூரம் முதலியவற்றை இங்கே வைத்து சுவாமியை வணங்குகிறார்கள்.

ஸ்ரீஐயப்ப சக்தி ஸ்வரூபிணியான மாளிகைப் புரத்தம்மனுடைய கோயிலும் இங்கேயே இருக்கிறது. இங்கே முக்கியமான வழிபாடு தேங்காய் உருட்டல் என்பது. பட்டு, மஞ்சள் பொடி, குங்குமம், வெற்றிலைப்பாக்கு முதலியவற்றைத் தேவியின் முன் வைத்து பிரசாதம் வாங்கிக் கொள்வார்கள்.

இங்கேயே சுவாமி சந்நிதி இருக்கிறது. இங்கே, அவல், நெல் பொரி, வெல்லம் பழம், தேங்காய் வறுத்த பொடி, காணிக்கை முதலியன வைத்து வணங்குவார்கள். திருஷ்டிதோஷ நிவர்த்திக்காகப் பாட இருப்பவர்களுக்கு முடிந்த அளவு பணம் கொடுத்து பாடச் சொல்வார்கள்.

கறுப்பு சுவாமி சந்நிதியில் திராட்சைப்பழம், கற்கண்டு, கற்பூரம், காணிக்கை வைத்து வணங்குவார்கள்.

நாகயட்சி சந்நிதியில் கற்பூரம், மஞ்சள்பொடி காணிக்கை முதலியவை வைத்து வணங்கிய பிறகு

சர்ப்ப தோஷம் ஏற்படாதிருப்பதற்கு சர்ப்பப் பாட்டுப் பாடச் சொல்வார்கள்.

சுவாமி சந்நிதியில் நெல் மிளகு, சந்தனம் ஊதுபத்தி, பன்னீர், நெய், தேங்காய். சுகந்தத் திரவியங்கள், காணிக்கை முதலியவை வைத்து வணங்குவார்கள்,

சுவாமியே சரணம் ஐயப்பா!
ஐயப்ப சரணம்!

## மாங்காடு - ஸ்ரீகாமாட்சி

சென்னை மாங்காட்டில் உள்ள காமாட்சி ஆலயம் இன்று பக்தர்களை ஏராளமாய் ஈர்ப்ப தைக் காண்கிறோம், அவ்வூர் கலைச் சிறப்பை யும், அதிலுள்ள சரித்திரப் புராணத்தையும், சமூக நல சாசனங்களையும், அற்புதப் பிரதிமங்களையும் கவனிப்போம்.

சூதவனம்' என்று பல்லவ மன்னன் விஜய தந்நதி விக்ரமவர்மனின் உதயயேந்திரம் செப்பேடு களில் பேசப்படும் இம்மாங்காடு பல்லவர் காலத்தி லேயே சிறப்புற்று விளங்கியது.

ஊருக்குத் தென்மேற்கு மூலையில் விளங்குவது வெள்ளீச்வரர் ஆலயம். பல்லவ மன்னர்கள்

அபராசிதவர்மன், நந்திவர்மன் காலத்தே தானங்கள் ஏற்று பிரபலமாய் விளங்கியதை அக்கோயில் கல்வெட்டுகளே தெரிவிக்கின்றன.

பின் வந்த சோழர்களும் விசயநகரத்தார்களும் தான் பிரதான வாயிலில் நீண்டு உயர்ந்த கோபுரங்களை நிறுவினார்கள். பல்லவர் ஆட்சியில்தான் கருவரை விமானம் எழுந்தது. இங்குள்ள வெற்றி பிள்ளையார் கையில் தாங்குவது மாம்பழம்! ஊரே ஆதவனம் (மாங்காடு)ஆயிற்றே.

இவ்வாலயம் ஏற்பட்டதின் பின்னணியில் ஒரு அற்புத கருத்தும் ஒளிந்துள்ளது. சிவனை நோக்கி காசியில் தவஞ் செய்தார் சிக்கிராசாரியர். பல்லாயிரம் ஆண்டுகள உருண்டும் சிவதரிசனம் கிட்டவில்லை இது போன்ற இக்கட்டுகளுக்கு ஈடு கொடுக்கத் தானே நாரதர் இருக்கிறார். நீ இன்னும் பல யுகங்கள் தவம் புரிந்தாலும் பிரயோசனமில்லை. உன்னைக் காட்டிலும் மூத்த முனிவர்கள் உனக்கு முன்பாகவே தவத்தை ஆரம்பித்து வரிசை கிரமமாய் காத்திருக்கிறார்கள். இக்காசியில், உன் முறை எப்பொழுது வருமோ ஆகையால் நீ காசி விட்டு, தமிழகம் சென்று காஞ்சிக்கருகில், ஆம் ரவணத்தின் சிவ தரிசனம் கோரி கௌரி தவமியற்றும் அங்கேயே ஓர் இடம் பிடி. அன்னைக்கு அருள் சீக்கிரம் கிட்டும் போது உனக்கும் வாய்க்கும் என வழி சொல்லி மறைந்தார்.

சுக்கிரன் (வெள்ளி) பூஜை செய்ய வெள்ளீச் வரர் என்ற நாமம் பூண்டார். இவ்விறைவன் காசியிலிருந்து சுக்கிரன் கொணர்ந்ததாகக் கூறப்படும் லிங்கம், சாளக்ராமம் போல் உளி படாத விடங்கனாய், சந்தன நிறந்தில் பிரகார தென்மேற்கு மூலையில் இருக்கிறார். புராதன தளி என்பதற்கு மேற்கு கோஷ்டத்தில் லிங்கோத்பவர் சாட்சி.

ஊருக்கு வடமேற்கு எல்லையில் ஒரு பெரிய வேப்பமரத்தடியில் ஜேஷ்டா குடி கொண்டுள் ளார். வீரர்கள் போருக்குப் புறப்படும்போது இதனையே வெற்றி வேண்டிச் செல்வார்கள். முதற்சோழன் பராந்தகன் காலத்தே தான் இத்தெய்வப் படிமங்கள் மிகுதியாய் வடிக்கப் பட்டன.

ஊரை வலமாய் வந்து வடகிழக்கு, மூலைக்கு வருவோம். கலி கோரி விஷ்ணு கிரகம் என்று கல்வெட்டுக்களால் போற்றப்படும். பெருமாள் கோயில், முதல் ரரஜேந்திர சோழன் ஆட்சியி லேயே நெடுவாயல் கிராமந்திலிருந்து விளக்கெரி விக்க ஆடுகள் தானமும் பெற்றது.

இப்பெருமான் கோயிலில் எங்குமே காணமுடி யாத ஒரு அற்புதம் உள்ளது. ஒரு சிலை கரண்ட மகுடம் தரித்து, ஒரு கையில் நீண்ட தண்டேந்தி

அர்த்த பத்மாசனத்தில் உட்கார்ந்திருக்கிறது. ஆனால் மூன்றாவது கால் ஒன்று, தொங்கு வலது காலுக்கு ஜோடியாய் சிலம்பு அணிந்து காணப் படுகிறது.

கழுத்தில் ஒரே ஒரு ஹாரம் அணியாக மணிக ளான ரத்னயக்ஞோபாவீதம் துலங்க, இவர் இன்ன அம்சம் என்று கூறமுடியாத அற்புதப் பிரதிமமாய் விளங்குகிறார்.

கிராமத்தில் நாயகமாய், விளங்குகிறாள் காமாட்சி.

ஒரு சக்தி உபாசக சிறபியால் தான் வார்க்கப் படமுடியும் எனும்படியும் யோகங்களுக்குரிய இலக்கணங்களையே உருக்கி வார்த்தது போல் விளங்கும் இந்த காமாட்சி, சமூகநலன் வாழ்வியல் பற்றிய ஊரார் இயற்றிய அரிய தீர்மானங்களைக் கல்வெட்டாய் கொண்டு விளங்கும் ஒரு சாசனம் இரண்டையுமே பலர் அறிந்திருக்க மாட்டார்கள்.

கௌரி என்றாலே பொன்னிறமானவள் என்று தான் அர்த்தம். பொன்னால் வார்த்த மேனி. பஞ்சாக்னியில் நிற்பதால் மேலும் பொன்னிறம் ஏற்றதுபோல் மினுமினுக்க, மயில் தோகை போன்ற கேச பாரம், அன்று மலர்ந்த தாமரை மலரொத்த தளிர்க்கை, கடைந்த சங்கு கழுத் தாக பிறை போன்ற நுதல. லக்ஷணங்களுடன்

சரகுகளையும் உண்பது விட்ட அபர்ணலான ஜகத் அம்பிகையும், அழகு கண்ட சிவன் மனம் சந்திரனைக் கண்ட கடல் போல் பொங்க, ஜப மாலை சற்றே நழுவ சபலமாயிற்று என்ற கவிகள் வர்ணனையை, காமாட்சி ரூபத்தில் காண்கிறோம்.

திரிமூர்த்திகளையே நேத்திரங்களாகக் கொண்டவள் காமாட்சி என்பதை வலது புஜம் தூக்கி விரல்களால் புருவமத்தியில் மூன்றாவது கண்ணை காட்டி, இடது கை இருதயதானத்தை சுட்டி, ஒரு கால் மடித்து, ஒற்றைக் காலால் அக்கினி மத்தியில் கடுந்தவம் புரியும் காமாட்சியை தரிசித்து தாத்பர்யங்களை புரிந்து கொள்ள முடியாதபடி மூடப்பட்டிருக்கும்.

உள்ளேயே உள்ள ஒரு திருச்சுற்று, அதன் மேற்கு சுவற்றில்தான் இருக்கிறது. ஒரு அபூர்வ கல் வெட்டு. திருமணம் என்ற புனிதச் சடங்கின் மறைப்பில் வரதட்சணை என்ற பெயரில் பொருள் ஈட்டத் துணிந்தோர் அந்த நாளிலும் இருந்ததையும் வரதட்சணையை இக்கிராம சபை எவ்வளவு கண்டித்தது என்பதையும் இக் கல்வெட்டால அறிகிறோம்.

எங்கிருந்து வந்தது இந்த வழக்கம்? வடநாட்டிலிருந்து ஒட்டி வந்த பழக்கமோ என்றால் அதுவுமில்லை.

வதுமை என்று நாளிட்டு அன்று வழக்கமாய் பெண்ணுக்குப் பத்து பசுக்கள் அளிக்கும் 'அர்தொ' என்ற முறை முன்பு இருந்தது. அதுவும் ஒரு வரதட்சணை தான். அதை கண்டித்ததோடு 'தட்சணை வெகுச் சிறியதாயிருந்தாலும் தவறே' என்றார் மனு. சட்டங்கள் நாயகனை இவ்வளவு கண்டித்து சுயவேட்கையும் பேராசையும் இக் கொடிய பழக்கத்தை இன்றளவும் கொண்டு வந்து சேர்த்திருக்கிறது.

கி பி. 1379 ல் விஜயநகரப் பேரரசன் இம்மடி புக்கரயான் ஆட்சிக்காலம் மலை மண்டலம் பெரு மகள் புல்லியூர் நாட்டு மகாப்பிரபு தம்பி இரவி செட்டிக்கு தன் பேரப் பெண்களின் வரதட்சணை யாக்க தன் பசிகைப்பள்ளி கிராமத்தையே விற்க வேண்டிய அவல நிலை ஏற்பட்டது.

அடுத்தடுத்து கி பி 1404, 1424 ல் தொடர்ந்து பல நிலங்கள் வரதட்சணைக்காக பராதீனமாக்கப் பட்டன என்று செய்திகளைக் கல்வெட்டுச் சாஸனங்கள் காட்டுகின்றன.

வரதட்சணையின் பெயரில் சுரண்டும் எண் ணம் பெருகியவுடன் ஊர் மன்றம் தலையிட வேண்டியதாயிற்று.

1347 விசயநகர வீரப்பிரதாப தேவராய மகா ராயன் அரசாண்ட காலத்தே படைவீட்டு ராச்ய

கன்னடியர், தமிழர், தெலுங்கர் பலரும் கூடி கன்யாதானத்தில் வரதட்சணை கொடுப்பவராயி னும், வாங்குபவரும் சாதிப்பிரஷ்டம் செய்யப் பட்டு ஒதுக்கப்படுவார்கள் என்று தீர்மானித்து, அதை விரிஞ்சிபுரம் அர்க்க புஷ்கரணி நீர, கோபி நாதராலயத்தில் சாசனமாய்ப் பொலிந்தார்கள்.

தீர்மானங்கள் நிறைவேற்றுவதும் சட்டங்கள் இயற்றுவதும் எளிது. ஆனால் மக்கள் மனமாற்றத் தினால் தானே நடைமுறையில் சாத்யமாகும்.

வரதட்சணையைப் பொருளாகப் பெற்றால் தானே தண்டனை? விற்பனை, தானம் என்ற பெயரால் நிலங்களை ஏற்றால் என்ன செய்ய முடியும்? குறுக்கு வழியில் புகுந்தனர்.

மன்றத்திற்கு மறுபடியும் தலைவலி. ஜயங் கொண்ட சோழ மண்டலத்து குலோத்துங்க சோழ வளநாட்டு புலியூர்க் கோட்ட இம் மாங்காட்டு மன்றம் கூடி "இவ்வூர் நிலத்தை வெளியாருக்கு வரதட்சணைக்காகக்கூட தானமாக்குவது தடுக்கப் படுகிறது" எனத் தீர்மானம் இயற்றி அவ் வாணையை கோயில் சுவற்றில் என்றும் நிலைக்க சாசனமாக்கிவிட்டனர்.

இது நடந்தது விசயநகர அரசன் பிரதாப தேவராயன் காலத்தில். அந்தக் கல்வெட்டே மேற்குச் சுவரில் இருக்கிறது.

நல்லபடியாக மணம் நிகழவேண்டும் என காமாட்சி தேவியைத் துதிக்க கோடிக்கணக்கான பெண்கள் வருகிறார்கள்.

எம்மைக் காத்திட வேண்டும் திருமணம் செய்துக் கொள்ள அருள்புரிய வேண்டும், மாங்காடு—காமாட்சி என்று தினமும் ஏராளமான கன்னிப் பெண்கள் வந்து வேண்டுகிறார்கள்.

நம்பிக்கை பலிக்கும். நான்மறை தீர்பபு.

## பம்பாய்-சித்தி விநாயகர்

பம்பாயில் அமைந்திருக்கும் சித்தி விநாயகர் கோயில் சக்தி வாய்ந்ததாகும்.

சித்தி என்றாலே நல்ல முடிவு என்று தானே பொருள். வெள்ளைக் கோபுரம் அடுக்கு மாடிகளுக்கிடையே சாதாரணமாகத்தான் தெரிகிறது.

சித்தி விநாயகரின் அருள்பெற சினிமா நடிகர்கள், அரசியல் வாதிகள் அநேகம்பேர் வருகிறார்கள்.

வெளிநாட்டில் வாழும் இந்தியர்கள் இந்த ஆலயத்திற்கு பொருள் உதவிகளை வாரி வழங்கி வருகிறார்கள்.

துபாய், இங்கிலாந்து, அமெரிக்கா, கனடா போன்ற நரடுகளிலிருந்தும் பணம் வந்து குவி கிறது.

சலவைக்கல் கட்டிடம் கட்டித்தர ஒருவர் என் றால் ஒன்னரை லட்ச ரூபாயில் முத்துமாலை காணிக்கையாக்க மற்றொருவர்.

விநாயகருக்கு எதிரே வெள்ளியில் ஆனமூஷிக வாகனம். இதைஅன்பளிபபாகத் தந்தவர் அரபியர் நாட்டில் வியாபாரம் செய்பவர்.

இந்த ஆலயத்திற்கு வண்ணமும், சாந்தும், சாயமும் பூச ஆகும் செலவை ஏற்றுக் கொள்ள முன்வருவோர் அனேகம் பேர்.

பம்பாய் பிரபாதேவி பகுதியில் உள்ள இந்தக் கோயிலுக்கு செவ்வாய்க்கிழமை அதிகக் கூட்டம் வருகிறது.

முதல் நாள் இரவிலிருந்தே மக்கள் கூடுவதற்கு ஆரம்பித்து விடுகிறார்கள்.

"ஆ! அதோபார் அமிதாபச்சன், ஜெயாபச்சன் அடடே இந்தப்பக்கம் லதாமங்கேஷ்கர்" என் றெல்லாம் சிலர் மெல்ல சுட்டிக் காட்டுவதைப் பார்க்கலாம்.

மராட்டிய மந்திரிகளையும் இங்கு நிச்சயம் பார்க்கலாம்.

செவ்வாய்க் கிழமைகளில் லட்சக்கணக்கான தேங்காய்கள் உடைக்கப்படுகின்றன. சதுர்த்தி தினங்களில் கேட்கவே வேண்டாம்.

விநாகரின் அருள்பெற லட்சோப லட்சம் மக்கள் வந்து கொண்டே இருக்கிறார்கள்.

கோயிலுக்கு வரும் பக்தர்கட்கு, கடைகள் தோன்றி விட்டன.

பாதசாரிகளும், ஊர்திகளில் வந்து இறங்குப் வர்களுடன் தோளோடு தோள் சேர்ந்து ஒரே வரிசையில் நிற்பதைப் பார்த்தால் வேற்றுமைகள் மறந்து விடுகின்றன.

சித்தி விநாயகர் கோயில் எப்போது கட்டப் ப்ட்டது என்று தெரியவில்லை. பல நூற்றாண்டு கள் புராதனமானது என்று சொல்கிறார்கள்.

சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன்பு பம்பா யைச் சேர்ந்த ஒரு குடும்பத்தினர் சுத்தப்படுத்திப் பராமரிக்க ஆரம்பித்தனர்.

பிறகு கூட்டம் வருமானம் இரண்டினையும் கணக்கில் கொண்டு மராட்டிய அரசு அறக் கட்டளையும். அதற்கு என்று ஒரு அறங்காவலர் குழுவையும் ஏற்படுத்தியது.

பல சமயத்தினரும் வந்து வணங்குகிறார்கள்.

சிரியன் கிறிஸ்துவப் பெண்மணி ஒருவர் தினந்தோறும் இந்தக் கோவிலுக்கு வருகிறார்.

யூதர் வகுப்பைச் சேர்ந்த ஒரு மாது பள்ளிக் கூடத் தலைமை ஆசிரியை. ஒரு நாள் இந்தக் கோவில் பக்கம் வந்தவர் "விநாயகரால் ஈர்க்கப் பட்டார். இப்போது கணேச பக்தை இவர்.

பார்சிகள், சீக்கியர்கள், கிறிஸ்தவர்கள் என்று எல்லா சமயத்தினரும் இங்கு வருகிறார்கள்.

பணக்காரப் பக்தர்கள் கூட மிகுந்த பக்திப் பரவசத்துடன் இந்த சித்தி விநாயகர் கோயிலைச் சுத்தம் செய்கிறார்கள்.

உடல் நிலை, கல்யாணம், கல்வி, வியாபாரம், தொழில், கலை போன்ற பலவற்றிற்காக வேண்டு தல் நிறைவேற வேண்டி வருபவர்களின் நம்பிக்கை பலிக்கிறது.

இங்கு வருபவர்கள் விநாயகரோடு ஆஞ்சனே யரையும் தரிசிக்கிறார்கள்.

மனமுடைந்து போனவர்கள் அங்கு வந்து தைரியம் பெறுகிறார்கள்.

வியாதிகள் தீர்கின்றன இந்த சித்தி விநாயக ரால்.

பம்பாய் சித்தி விநாயகர் ஆலயத்திற்கு வரும் வருமானம் சுமார் சராசரியாக மூன்று லட்சம் ரூபாய் இங்கு வசூலாகும் தொகை தானதர்மத்திற்கும், கான்சர் போன்ற நோய் தீர்க்கவும், ஆஸ்பத்திரிகளுக்கும், ஏழை எளியவர்கள் மறுவாழ்விற்கும் நன்கொடையாக தருகிறார்கள்.

காது கேட்காத பேச முடியாத குழந்தைகள் பள்ளிகளுக்கும், கல்வி சாலைகளுக்கும், புத்தக சாலைகளுக்கும், பரிசோதனை கூடங்களுக்கும், நிதிஉதவி தருகிறார்கள்.

விநாயகர் கோவில் பணத்திலிருந்து வேத பாடசாலையொன்றும் நடக்கிறது.

பக்தர்களிடம் இருந்து பணம்பெற்று உயர்ந்த பணிகளுக்குத் திருப்பி விட்டு அருள் சுரந்து வீற்றிருக்கும் சித்தி விநாயகரின் கருணையும் அருளையும் பெற நாமும் ஒருமுறை பம்பாய் செல்கையில் பிரபாதேவி சென்று சித்தி விநாயகரை வணங்கி திரும்பலாம்.

பம்பாய்—சித்தி விநாயகர், பக்தர்கள் குறைகளை தீர்ப்பதில் பாகுபாடு காட்டுவதில்லை.

# ஜன் கல்யாண் ஜக் ஜாக்ரத்

1988 அக்டோபர் மாதம் விஜயதசமி அன்று 'ஜன், கல்யாண்' 'ஜக் ஜாக்ரத்' என்ற இயக்கம் மக்கள் நல்வாழ்வுக்காகத் ஆரம்பிக்கப்பட்டது. "ஜன கல்யாண்; ஜக் ஜாக்ரத்" நோக்கங்களை காஞ்சிப் பெரியவர் தெரிப்பதாவது:

ஜன் கல்யாண் ஜக் ஜாத்ரத் நோக்கம், மனிதனை மனிதனாகப் பார்த்து அன்போடும், பாசத்தோடும் பழகவேண்டும் என்பது தான்.

இதற்காக ஆன்மீகப் பயிற்சியாளர்களை வைத்து ஜன் கல்யாண் உறுப்பினர்களுக்குப் பயிற்சி கொடுக்கிறோம்.

பயிற்சி பெற்றவர்கள் கிராமங்களுக்குச் சென்று சமய அடிப்படையில் எப்படி இறைவனை வழிபடுவது, பஜனை செய்வது, தியானம் செய்வது போன்ற பழக்கங்களை மக்களுக்குச் சொல்லிக் கொடுத்து வருகிறார்கள்.

இதுவரை ஆன்மீக விஷயங்களை மக்களுக்கு எடுத்துச் சொல்ல அந்தந்த துறையில், தேர்ந் தவர்கள் இல்லையே.

இப்போது 'ஜன் கல்யாண்' இயக்கத் தொண்டர்கள் மக்களுக்கு ஆன்மீகப் பயிற்சிகள் அளிப்பதால் 'நமக்கும் மந்திரம் சொல்லித் தருகிறார்கள்; தீட்சை கொடுக்கிறார்கள்' என்ற நம்பிக்கை மக்கள் மத்தியில் ஏற்பட்டு வளர்ந்து வருகிறது. அதனால் மக்கள் ஆர்வமாக இந்த ஆன்மீகப் பயிற்சிகளில் ஈடுபட வருகிறார்கள்.

வெறும் பக்தியைப் பற்றி மட்டும் மக்களுக்குப் போதித்தால் வயிற்றுப் பாட்டுக்கு என்ன வழி என்று கேட்கலாம்.

ஜன் கல்யாண இயக்கத் தொண்டர்கள் பேங்க்குடன் தொடர்பு கொண்டு கிராம மக்களுக்கு பல்வேறு லாபகர பணிகட்கு கடன் பெற்றுத் தர வழிவகை செய்து வருகிறார்கள்.

இவ்வாறு ஆன்மீகச் சேவையும் சமூக சேவையும் செய்து வருகிறது, ஜன் கல்யாண்.

கிராமங்களில் பஜனைகள் நடைபெறவும், கோயில் புனரமைப்புப் பணிகள் நடைபெறவும், அப்படி புனரமைப்பு செய்த கோயில்களில் ஆறு காலம் பூஜைகள் நடைபெறவும், தினசரி பூஜை நடைபெறாமல் இருக்கும் கோயில்களில் ஒரு வேளை நைவேத்தியமாவது வைக்கவும் 'ஜன் கல்யாண்' தொண்டர்கள் பணி செய்து வருகிறார்கள்.

'பிடி அரிசி திட்டம்' இயக்கம் என்று ஒன்று ஆரம்பித்திருக்கிறோம். வீட்டுக்கு ஒரு பிடி அரிசி வாங்கி கோயில்களில் இறைவனுக்கு நைவேத்தியம் வைத்து பூஜை செய்யவும், பின் அந்த நைவேத்தியத்தை ஏழை எளிய மக்களுக்கு அன்னதானமாக வழங்கவும் 'ஜன் கல்யாண' தொண்டர்கள் உதவுகிறார்கள்

இது மாதிரி நிர்மாணப் பணிகளில் 'ஜன் கல்யாண்' இயக்கம் ஈடுபட்டுத் தீவிரமாகப் பணி யாற்றி வருகிறது.

இத்துடன் ஏழை எளிய பெண்களுக்குத் தையல பயிற்சி அளிக்கவும் ஏற்பாடுகள் செய்து வருகிறோம். பெரிய தொழில் நிறுவனங்களின் அதிபர்களை அணுகி, அந்த நிறுவனங்கள் மூல மாக இலவசமாகத் தையல் மிஷின்களை பெறு கிறோம். கஷ்டப்படுகிற கிராம மக்களைத் தேர்ந் தெடுத்து, தாலுகா மையங்களில் தையல் பயிற்சி நிலையங்கள் தொடங்கி இருக்கிறோம்.

தமிழ்நாடு முழுவதும் இதுபோன்ற தையல் பயிற்சி நிலையங்கள் இயங்கி வருகின்றன.

பயிற்சி பெற்றவர்களுக்கு ஜன் கல்யாண அங்கத்தினர்களே தையல் மெஷின் வாங்கிக் கொடுத்து வருகிறார்கள்.

நிறைய துணிமணிகள் தைக்கும் வசதி படைத்த செல்வந்தர்கள் குடும்பங்களை அணுகி? அவர்கள் வீட்டுத் துணிமணிகளையும் அவர்கள் மூலமாக இன்னும் சில குடும்பங்களில் உள்ளவர் களுக்கும் வேண்டிய துணிமணிகள் பெண்களுக்கு வேலை வாய்ப்பையும் ஏற்படுத்திக் கொடுக் கிறார்கள்.

இதில் அந்த மக்களுக்குக் கிடைக்கிற வரு மானத்தில் இருந்து தையல் மெஷினுக்கு என்று ஒரு ரூபாய் மட்டுமே பிடித்துக் கொள்கிறார்கள்.

காஞ்சிபுரத்தில் மட்டும், படித்து வேலை இல்லாமல் இருக்கும் இளைஞர்களுக்கு அரசு அங்கீகாரத்துடன் எலக்ட்ரிகல், மெக்கானிக்கல், டி. வி., ரேடியோ ரிப்பேரிங் தொழிற் பயிற்சி நிறுவனம் அமைத்திருக்கிறோம். அதன் மூலமாக அதிகார பூர்வமான டிப்ளமோ பெறுவதற்கான பயிற்சி கொடுத்து வருகிறோம்.

டிப்ளமோ பயிற்சி முடிந்ததும் கூட்டுறவு நிலையங்களில் அவர்களை அங்கத்தினர்களாக்கி விடுகிறோம். அதனால் அரசாங்க சம்பந்தமான வேலைகள் அவர்களுக்கு கிடைத்து விடுகிறது.

இவ்வாறு இளைஞர்களை நல்ல சக்தி வாய்ந்த வாலிபர்களாகவும், தன்னம்பிக்கை உடையவர் களாகவும் உருவாக்கி வருகிறோம். நாட்டின் நல்ல

குடிமகனாக, சமுதாயம் மதிக்கத் தக்க பண்புள்ள குடிமகனாக, கடமை உணர்வு உள்ளவர்களாக அவர்களை நல்வழிப்படுத்திக் கொண்டு வரு கிறோம்.

என்ன வேலை செய்தாலும் அவர்களுக்கு இறை உணர்வு வேண்டுமல்லவா? அந்த அவசியத்தை உணர்ந்து எல்லோரும் ஏற்றுக் கொள்ளும் வகையில் பொதுப் பிரார்த்தனை முறை ஒன்றை உருவாக்கி அங்கங்கே செயல்படும் படி செய்திருக்கிறோம்.

எங்கள் இயக்கத்தில் சேருபவர்கள் 'வேலை நிறுத்தம்' போன்ற நாட்டின் பொருளாதாரத்தைச் சீர்குலைக்கும் புத்தி இல்லாமல், நாட்டுப்பற்றும், சமய உணர்வும் உள்ளவர்களாக உருவாகி வரு கிறார்கள்.

ஒன்றரை லட்சம் பேர் வரை உறுப்பினர் களாக இருக்கிறார்கள். அத்துடன் இரவுப் பள்ளி, ஏழை எளிய பின்தங்கிய இனத்தின் குழந்தை களுக்கு டியூசன் நடத்தும் பணியில் ஈடுபட்டு இருக்கும் ஜன் கல்யாண் உறுப்பினர்களையும சேர்த்தால் இரண்டு லட்சம் பேராவது இருப் பார்கள்.

இடம் வாங்குவது, பயிற்சி அளிக்கும் ஆட்கள் தேர்ந்தெடுப்பது என்று பல வேலைகள் இருக் கின்றன.

முதல் வேலையாக எல்லா இடங்களிலும் கடமை உணர்வும் சமுதாய உணாவும் உள்ளவர்களைக் கொண்டு ஒரு குழு அமைத்திருக்கிறோம். மற்ற பணிகளையும் செய்வதற்கான நடை முறைக்கு ஏற்ற திட்டங்களை உருவாக்குவதற்கும் முயன்று வருகிறோம்.

சந்தாப் பணம் கொடுப்பவர்களை மட்டும் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்வதில்லை. எங்களுடையக் குறிக்கோளை அதாவது லட்சியத்தை ஒத்துக் கொள்ள வேண்டும். அதுதான் முக்கியம். ஆன்மீகப் பற்றும் தேசப்பற்றும் இருக்க வேண்டும். சுதேசிப் பொருட்களைத்தான் உபயோகிக்க வேண்டும் என்ற தேசீய உணர்வும் இருக்க வேண்டும்.

இது மாதிரிப் பதினெட்டு அம்சத் திட்டம் வைத்திருக்கிறோம். அதை ஏற்றுக் கொள்கிறவர்களைத்தான் 'ஜன் கல்யாண்' உறுப்பினர்களாக ஏற்றுக் கொள்கிறோம்.

இன்றைக்கு அனைத்துத் துறைகளிலும் மக்களிடம் இருக்கிற முக்கியமான குறைபாடே பணத்தை மாத்திரம் குறியாகக் கொள்வதுதான். ஆன்மீகத்தையும், தேச பக்தியையும், நாட்டுப் பொருளாதார வளர்ச்சி உணர்வையும் அவர்கள் வாழ்க்கையின் முக்கிய லட்சியமாகக் கொள்ளும்

உணர்வை ஏற்படுத்திவிட்டால் பணம் தானாகவே இரண்டாம் பட்சமாகி விடும்.

'ஜன் கல்யாண்' இயக்கமோ அந்த இயக்கத்தைச் சேர்ந்தவர்களோ அரசியலுக்குப் போகமாட்டார்கள். தேச நலனுக்கு வேண்டிய நல்ல விஷயங்களை மட்டும் மக்களுக்கு நினைவுபடுத்திக் கொண்டே இருப்பார்கள். நாட்டு நலனுக்காக எந்த தியாகத்தையும் மேற்கொள்ளும் ஆற்றல் படைத்தவர்கள் நாங்கள். அரசியலில் நாங்கள் ஒரு நாளும் இறங்கவே மாட்டோம்.

ஆனால் அரசியல் எப்படி இருந்தால் தேசத்துக்கு நல்லது என்பதை பொது மக்களிடம் தொடர்ந்து வலியுறுத்திச் சொல்வோம்.

மத்தியில் அரசியல் சரியாக இருந்தால்தான் மாநிலத்திலும் அரசியல் சரியாக இருக்கும் என்று நம்புகிறோம்.

கடவுள், எல்லாருக்கும் சமமாக அருள்புரியக் கூடியவர். எந்த விதமான வேற்றுமையும் அவர் மனசில் வராது. சூரியன், சந்திரன் எப்படி எல்லோருக்கும் ஒளி வீசுகிறதோ அப்படித்தான் அவர்.

அரசே சுயாட்சித் தன்மையுடன் கூடிய ஒரு அமைப்பை ஏற்படுத்த வேண்டும். அதில் ஓய்வுப்

பெற்ற நீதிபதிகள், ஐ. ஏ. எஸ்., ஐ. பி. எஸ். அதிகாரிகளை நியமிக்க வேண்டும்.

இப்போதும் ஐ ஏ.எஸ். அதிகாரி தலைமையில் ஒரு கமிஷனர், டெபுடி கமிஷனர் என்று இருக்கிறார்கள்.

தனிப்பட்ட முறையில் இந்துவாக இருந்தாலும் அரசு அதிகாரி என்று வரும்போது மதச் சார்பில்லாமல்தான் அவர்களால் செயல்பட முடிகிறது. அதனால் பல சிரமங்கள், கஷ்டங்கள் நேருகின்றன.

எனவே அறநிலையத் துறைக்கும் மாநிலம் முழுக்கச் சேர்த்து வரவு—செலவு பார்க்கிற முறையைக் கொண்டு வரவேண்டும்.

அப்படி வருமானால், அதிகமான வருமானம் வருகிற ஆலயத்தில் மிஞ்சுகிற பணத்தைக் கொண்டு, வருமானம் இல்லாமல் பூஜா காரியங்களே செய்ய முடியாமல் கஷ்டப்படுகிற ஆலயங்களுக்குச் செலவு செய்ய முடியும்; எல்லாக் கோயில்களிலும் ஆலயப் பணிகள் சிறப்பாகவும் திறமையாகவும் நடைபெறும்.

நல்ல சக்தி வளர வேண்டும். தீய சக்தி அழிய வேண்டும் என்பதற்காகத்தான் ராமாவதாரம். மக்களிடையே பெரும்பாலோரிடையே கஷ்டப்

பட்டு உழைக்க வேண்டும்; உழைத்து சம்பாதிக்க வேண்டும்; தர்மம் பண்ண வேண்டும் என்ற மனோபாவம் இல்லை. அதை சகல மக்களிடையே யும் உண்டாக்கி வளர்க்கும் பணியில்தான் 'ஜன் கல்யாண்' முயன்று கொண்டேயிருக்கிறது.

## அய்யனார் சிலைகள்-காவல் தெய்வங்கள்

தமிழ்நாட்டில் ஊர்களின் எல்லையில் காவல் தெய்வங்களாக அய்யனார்களை காண்கிறோம். கொங்கு ஆய்வகம் சேலத்தில் உள்ளது. இது டாக்டர் ராஜண்ணன் தலைமையில் வேலை செய் கிறது. இவர் அமெரிக்காவில் இந்திய கலாச் சாரத்தை ஆராய்ந்து டாக்டர் பட்டம் பெற்றவர். சமீபத்தில் சேலம் மாவட்டம் பழைய பண்பாடு பற்றிய கருத்தரங்கில் ராஜண்ணன் பேசியதாவது:

உருவங்களை வழிபடுவது எகிப்திலே இருந்து வந்ததாகும். சமணர்கள், புத்தர்கள் அப்புறம் இந்துக்கள் என்று பரவியது. சேலத்தில் சமண முனிவர் சிலை தலையில்லாமல் கிடந்தது. பிறகு தலை கண்டெடுக்கப்பட்டது. அதை தலைவெட்டி முனியப்பன் என்று கும்பிடலாயினர்.

அய்யனார்களால் கொங்கு மக்கட்கு மன நிறைவு, அமைதி, மகிழ்ச்சி ஏற்படுகின்றது. தென்னிந்திய கிராம தேவதைகளைப் பற்றி ஆங்கிலத்தில் புத்தகங்கள் உள்ளன. ஹென்றி ஒயிட்ஹெட் சென்னையிலே பிஷப்பாக இருந்தவர். இவரும் ஒரு நூலை எழுதிவிட்டார் வில்மர் தியோடர் எல்மோர் அமெரிக்காவிலே இருக்கிற நெப்ராஸ்கா பல்கலை கழக டாக்டர். இவர் இந்து சமயத்தில் திராவிடத் தெய்வங்கள் என்ற நூலை எழுதினார். நமது தெய்வங்கள் அவற்றை நாம் எவ்வாறு கும்பிடுகிறோம் என்றெல்லாம் சொல்கிறார். சேலம் மாவட்ட முனியப்பர்கள் என்ற ஆங்கில புத்தகம் சமீபத்திய வெளியீடு.

கிராமத்து எல்லையிலே அமர்ந்து காவல் காக்கும் தெய்வமாக அய்யனாரை அறிவோம். அவர் இரவில் போர்க்குதிரையின் மேலேறிக் கொண்டு, யானை, குதிரை, வேட்டை நாய், வீரர் என்ற கும்பலோடு ஊரை வலம் வந்து காப்பாற்றிக் கொண்டிருப்பதாக நம்புகிறோம்.

இரண்டு அய்யனார்களை காண்கிறோம் சித்திரை வைகாசி மாதங்களில் ஆடுகளை வெட்டியும் கோழிகளை அறுத்தும் பூஜை செய்வது சேலம் மக்களின் வாழ்க்கையாகும்.

சேலம் குகையில் மன்னார்சாமி பச்சையம்மனோடு காணப்படுகிறார். வெளியே திறந்த

வெளியில் மரத்தினடியில் உள்ளனர். ஏழு கிராம தேவதைகள் உள்ளன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு உயரம். வலது கால்களின் கீழே பூதங்களின் தலைகள் நசுக்கப்பட்டு கிடக்கின்றன.

இந்த சிலைகளை எப்படி செய்கிறார்கள். சுண்ணாம்பு, முட்டை வெள்ளைக்கரு, பனை வெல்லம், நாட்டு மருந்துகள் இவற்றோடு சிற்பியின் கைவண்ணமும் சேர்ந்தால் அற்புதமான அய்யனார் சிலைகளும் தேவதைகளும் குதிரை உருவாகி விடுகின்றன. இவை வெய்யில், மழை புயல் காலம் இவற்றை மீறி சிதையாமல் இருக்கின்றன. இரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை வண்ணக் கலவை பூசுகிறார்கள். நீர் முழுக்கு செய்வதில்லை. இப்போது செங்கல் கான்கிரீட்டால் சிலைகள் தயாராகின்றன.

இரட்டை அய்யனார்களை குதிரைகள், யானைகளோடு சேலம் இரும்பாலை அருகே கருக்கல்வாடி காட்டூரில் பார்க்கிறோம். குயவர்கள் சிலைகளை செய்வதுண்டு. போர்க்குதிரைகளைக் காணலாம்.

சமீபத்தில் பிரிட்டிஷ் ஒலிபரப்பு கம்பெனி (பி.பி சி.) தமிழ்நாட்டு பலிக்குதிரைகள் என்று சினிமா படத்தை ரிலீஸ் செய்து உள்ளது. வேண்டுதலுக்காக வைக்கப்படும் மண் குதிரைகள் குயவர்கள் கைவண்ணமே. இவை ஒன்று ரூ 200 முதல்

ரூ 500 வரை விலையாகின்றன. பலிபூஜையில் விழும் ஆடு, கோழி குயவர்கட்கேயாகும்.

சேலத்திலிருந்து திருச்சி போகும் சாலையில் போலீஸ் குழு புடைசூழ அமர்ந்திருக்கும் அய்யனாரை காணலாம்.

வாளேந்திய கை, வன்சூலம் தரித்த கை, வலது காலை தரையில் ஊன்றி, இடது காலை மடித்து மடியின்மேல் வைத்துக் கொண்டு மீசையை முறுக்கி விட்டுக் கொண்டு அய்யனார் கெட்ட சக்திகளை மிரட்டிக் கொண்டுள்ளார்.

அய்யனார், நெற்றியில் திருநீற்றுப் பட்டையோடு அடர்த்தியான புருவங்களை கொண்டு பெரிய இமைக்காத கண்களோடு உதடுகள் துடிக்க, கோரமான பற்கள் தெரிய காட்சியளிக்கிறார். காவல் தெய்வங்களாக ஊர் எல்லையில் அய்யனார் சிலைகள் விளங்கிக் கொண்டேயுள்ளன.

## சமய கடமைகள்

**ஜகத் குரு ஸ்ரீ ஜயேந்திரர் சமயக் கடமைகளைப் பற்றி சொல்வதாவது :**

ஸ்ரீ விநாயகரை தோப்புக்கரணம் போட்டு வணங்குங்கள்.

- பிறருக்கு பழைய உடைகளை கொடுங்கள்.
- வீட்டு வாசற்படியில் மஞ்சள் குங்குமம் இடுங்கள்.
- எந்த கடவுளையும் ஒரு முறைக்கு சுற்றி மேல் வரவேண்டும்.
- மகாபலி போன்ற சில பக்தர்கள் வருபவர்களுக்குத் துணையாகப் புறப்பட்டு வருகின்றார்கள், அவர்களைக் கோயிலிலேயே இருக்கச் செய்ய வேண்டும் என்பதற்காகத் தான் அமர்வது, அத்துடன் சிலநாமம சொல்லுங்கள்.
- ஜபம் தாமரை மணிமாலையால் செய்யுங்கள்.

- வாழ்நாளில் நாம் நல்ல பணிகளை அறச் செயல்களைச் செய்தால் நல்ல பலன் கிட்டும் என்பதால் செய்யுங்கள்.
- ஸ்ரீகாளி படத்தை வைத்துப் பூஜியுங்கள்.
- சிவாலய நவக்கிரகங்களை ஒன்பது முறை பிரதட்சணம் செய்யுங்கள்.
- பண்புகள் நிறைந்த நமது நாட்டில் ஆண்கள் மேலாடையை - துண்டை இடுப்பில் அணியுங்கள். மேலாடை இல்லாமல் எல்லா ஆலயங்களுக்கும் சென்று வழிபடும் முறையை கடைபிடியுங்கள்.
- தொட்டிலில் வைத்த பெயருக்கு கோயிலில் (மற்றும் சுலபமான பிரார்த்தனைகளில்) அர்ச்சனை செய்யுங்கள்.
- பூஜைக்கு விநாயகருக்கு அடுக்கு நந்தியாவர்த்தம் சிவனுக்கு தாழம்பூ தவிருங்கள்.

சிவனுக்கு வில்வ அர்ச்சனை விசேடம் கடவுள் பூஜைக்கு, ஒரே பெயர் கொண்ட புஷ்பத்தில் இரண்டு மூன்று நிறங்கள் கொண்டவை கூடாது. உதாரணம் நீலம், வெள்ளை, சிவப்பு சங்கு. (புஷ்பம்) விஷ்ணுவுக்கு துளசி உகந்தது அம்பாளுக்கு வெண்ணிற வாசனை உகந்தது.

○ ஆலய வழிபாட்டுக்கு அதிகாலையில், மாலை வேளையில் செல்லுங்கள்.

○ எவர்சில்வர் பாத்திரங்களை தானம் கொடுக்காதீர்கள். (இது இரும்புவகையை சேர்ந்தது) இதேபோல் பூஜை பாத்திரங்கள் எவர்சில்வரில் கூடாது.

○ வீட்டிலேயே ஆண்டவனை வழிபடுவது நல்லது. மற்றும் ஆலயத்தில் வழிபடுவது, அங்கே சரிவர பூஜைகள் நடைபெற, பொருளால் உதவுவது—சரீரத்தால் தொண்டு புரிவது மிக உயர்ந்தது.

நல்லெண்ணெயில்தான், வீடு ஆலயங்களில் விளக்கேற்ற வேண்டும். கோயில் விளக்குகளுக்கு இலுப்பை எண்ணெய் மிக சிரேஷ்டமானது.

○ முன்னறி தெய்வமான பெற்றோர்க்கு கற்பூர ஆரத்தி காட்டுங்கள. தெய்வப் படங்களுடன் வைத்து வணங்குங்கள்.

○ கோயில் பிரசாதங்களாகப் பெறும் திருநீறு, குங்குமம் வீட்டில் நிறைய சேர்ந்து விடுகிறது. அந்த பிரசாதங்களை ஆறு குளம் போன்ற நீர் நிலைகளில் கரைத்து விடுங்கள்.

○ ராம நாமத்தை நேரம் கிடைக்கும் போதெல்லாம் சொல்லுங்கள்.

- சுமங்கலி பிரார்த்தனைக்குக் கட்டுபவர்கள் எப்படி இருந்தாலும், சுமங்கலிகளுக்கு 9 கஜம் புடவை கொடுங்கள்.

- பால முருகனையும், சஞ்சீவி ஆஞ்சநேயரை யும் பூஜை அறையில் வைத்து பூஜை செய் யுங்கள்.

- இடது கையால் கணவன் முதலிய யாருக்கும் பரிமாறக் கூடாது. உண்ணும் போது மட்டு மல்ல, எந்த ஒரு பொருளையும் இடது கை யால் யாருக்கும் கொடுப்பதை தவிருங்கள்.

காலையில் எழுந்து தேக சுத்தம் செய்து, கொண்டு, நீராடி, தூய வஸ்திரம் அணியுங்கள். நெற்றித் திலகமுடன் கிழக்கு முகமாக சூரியன் முன் நின்று அல்லது அமர்ந்து கொண்டு, "ஆதித்ய ஹிருதயம் சொல்லுங்கள் இதனால், உடல் ஆரோக்கியம் கிட்டும். மனம் புத்துணர்ச்சி பெறுங்கள்.

- மாணிக்கவாசகர் போன்றும், அப்பர் அடிகள் போன்றும் பூரண நம்பிக்கையுடன் நீங்கள் இறைவனைப் பிரார்த்தனை செய்யுங்கள். அப்படிப்பட்ட நம்பிக்கையுடன் பிரார்த்தனை செய்தால் முன்வினைப் பயன்கள் தீரும். சோதனைகள் மறையும்.

"கற்றுணை பூட்டிக் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சிவாயமே..."

# கடவுளோடு ஐக்கியமாக...

மந்திர சக்தி பற்றி சுவாமி சின்மயானந்தர் சொல்வதாவது:

ஜபம் செய்யப் பயன்படும் மாலையில் 108 மணிகள் இருக்கின்றன. அஷ்டோத்திரம் போல 108 தடவை சொல்ல வேண்டிய மந்திரங்களுக்கு இது மிகவும் பயன்படும். மோதிர விரலையும், கட்டை விரலையும் வைத்து ஜபமணிகளை ஒவ்வொன்றாக உருட்ட வேண்டும். ஒரு விரலால் ஒவ்வொரு தடவையும் அடுத்த மணியை தள்ளிக் கொண்டு வரவேண்டும். சுட்டு விரல் இதற்கு பயன்படுவது இல்லை. ஏன்? அது பிறர் மீது உள்ள குற்றங்களை சுட்டிக் காட்டுகிறது. பிறரை பய முறுத்த அந்த விரலைத்தான் ஆட்டிக் காட்டு கிறோம். ஆகையால் அது ஜபம் செய்யப் பயன் படாது.

மேரு-மணி என்பது 108 தடவை சொல்லி முடிக்கும்போது மீண்டும் வரும். இது மாலையில் பிரதானமான மணியாகும். இதை விரலால் உருட்டக் கூடாது. 107வது மந்திரம் சொன்ன மணியைக் கொண்டே அடுத்ததையும் சொல்லி

விட்டு மேருமணியை தொடாமலே 108வது மந்திரத்துக்கு போய்விடுங்கள் 1 நாளைக்கு 20 மாலைகள் வரை ஜபம் செய்யலாம். 1 தடவை காலையிலும், 1 தடவை மாலையிலும் செய்வது முறையாகும.

மந்திரம் என்பது கடவுளை நினைக்க உதவுவது. அதைக் சொல்லும்போது அவருடைய உருவத்தை நீங்கள் எண்ணிக்கொள்ளலாம். இதில் ரகசியம் ஏதுமில்லை. ஆனால் குருவின் மூலம் உபதேசமாக அதைப் பெறும்போது அதற்கு ஜீவக்களை வந்து விடுகிறது. ஞானியான ஆசான் அதன் மூலம் தனது சீடனுக்கு தனது ஆன்மீக சக்திகளையே மாற்றிக் கொடுக்கிறார். ஆகையால் மந்திரத்தை குருநாதர் மூலம் பெறுவதுதான் சிறப்பு.

மந்திரத்தை சொல்ல பிரதீகா(விக்ரகம்), பிரதிமா(வடிவம்) இரண்டில் ஒன்றாவது ஆரம்பத்தில் தேவை. முதன் முதலில் கணக்குப் பாடம் கற்றுக்கொள்ளும்போது வாய்ப்பாடு தேவை. அப்புறம் படிப்படியாக முன்னேறியபின் அது இல்லாமலே கணக்குப் போட்டு விடுகிறோம். மந்திரங்கள் மூலம் மானசீகமான இஷ்ட தெய்வத்தை நினைத்து வழி 'டபழகியபின் இது தேவைபடாது.

# இறைவனோடு தொடர்பு வளர

இறைவனோடு தொடர்பு வளர சீதாராம சுவாமிகள் அருளியிருப்பதாவது:

பூமியிலே புல்பூண்டுகள் முளைக்கின்றன. மரம் செடி செடிகள் முளைக்கின்றன. முளைத்து வளர்ந்து முதிர்ந்து மடிகின்றன. அவ்வாறு ஒரு புறம் மடிந்து கொண்டிருக்கும்போது, இன்னொரு புறத்தில் புதிதாக முளைத்துக் கொண்டிருக்கிறது. உலகம் தோன்றியது முதல இடையறாது நடைபெற்று வருகிற ஒரு நிகழ்ச்சி இது.

இதன் பொருள் என்ன?

மண்ணுக்குள்ளே ஒரு சக்தி இருக்கிறது. அது இடையறாது இயங்கிக் கொண்டு இருக்கிறது. இநத இயக்கத்தின் விளைவாக பூமியில் மரம் செடி, கொடிகள் முளைத்துக் கொண்டே இருக்கின்றன.

மண்ணுக்குள் இருக்கும் அந்த சக்தியை போலவே, மனிதனுக்கு உள்ளும் ஒரு சக்தி இருக்கிறது.

அதுதான், தைர்யம். இறை நம்பிக்கையே தைர்யம் தரும்.

நமது தைர்ய சக்தியை நாம் எந்த அளவுக்கு பயன்படுத்துகிறோமோ, அந்த அளவுக்கு உலகம் நமக்கு இன்பமாக இருக்கிறது.

உலகின் இன்பங்களை சுவையோடு நோக்குவதுதான், தைர்ய சக்தியைப் பயன்படுத்த வேண்டிய முறையாகும். நம் ஒவ்வொருவருக்கும் இயல்பிலேயே அமைந்து உள்ளது.

நாம் நமது தைர்ய சக்தியை வளர்த்துக் கொண்டு, வாழ்க்கையைச்சுவையுள்ளதாய் ஆக்கிக் கொள்ள வேண்டும்.

இதற்கு.

நம் உள்ளத்தில் கோபம், பொறாமை, அவநம்பிக்கை போன்ற அழிவு உணர்ச்சிகளுக்கு இடம் கொடுக்கக் கூடாது.

நாம் அன்பு, அமைதி, பொறுமை, நம்பிக்கை உணர்ச்சிகளில் நம் மனத்திற்குப் பயிற்சி அளிக்க வேண்டும்.

நாம் நடந்து போனதைப் பற்றி எந்த நேரமும் நினைத்துக் கொண்டிருக்கக் கூடாது.

நாம் நடக்கப் போவதைப் பற்றி ஒரு திட்டம் வகுத்துக் கொண்டு நாம் உடனடியாக கவனிக்க வேண்டிய காரியங்களில் மட்டுமே நம் கருத்தை செலுத்த வேண்டும்.

அப்படிச் செலுத்தினால், நாம் ஈடுபடுகிற காரியம் எவ்வளவு கடினமானதாய் இருந்தாலும் அது இன்பகரமானதாய் இருக்கும்.

நம்மிடம் தைர்ய சக்தி வளரும், அதாவது இறை நம்பிக்கை வளரும். இறை நம்பிக்கை ஒன்று தான் தைர்யத்தை கொடுக்கவல்ல மகத்தான சக்தியாகும்.

தைர்யசக்தி அதாவது இறை நம்பிக்கை என்பது நம் உள்ளத்திற்கு ஓர் இரும்புக் கவசத் தைப் போன்றதாகும்.

இறை நம்பிக்கை என்னும் கவசத்தை தைரியம் ஏந்தி அணிந்து கொண்டிருக்கும் வரையில், வானமே இடிந்து தலையில் விழுந்தாலும் கலக்கம் அடைய வேண்டியதில்லை. வாழ்க்கையில் எதற்கும் அஞ்சவேண்டியதில்லை.

கடவுளை நம்பினோர் கைவிடப்படார்.

கோயில்களும் தெய்வீக முயற்சிகளும் பாரத மக்களை வாழ்வாங்கு வாழ வைக்க உதவும். இவற்

றால் ஒழுக்கமுள்ள நல்ல பிரஜைகளாக வாழ்வோம். "உலக நாடுகளிலேயே இந்தியா உயர்ந்தது; இந்தியர் உயர்ந்தவர்கள், இந்தியர் வாழ்க்கை தெய்வீக முயற்சிகளோடு ஒட்டியது; இந்தியர் செயல்களை தங்கள் முயற்சிக்கும் முன்னேற்றத் திற்கும் வணங்கி மேலோங்கி வந்து கொண்டிருக் கிறார்கள்" என்பதை மனம்—வாக்கு—காலம் ஆகியவற்றால் நிரூபித்துக் கொண்டே வாழ்வோம்.

## அமுத வெள்ளம்

அமுத வெள்ளம் பற்றி காஞ்சி பெரியவர் சொல்வதாவது:

தீபம் என்றால் விளக்கு என்பதை எல்லாரும் அறிவர். ஆவணி என்றால் வரிசை என்பதை சிலரே அறிவர்.

விளக்குக்கு, விளக்கு என்று ஏன் பெயர் வந்தது?

விளங்காமல் இருக்கும் பொருள்களை விளக்கிக் காட்டுவதால் விளக்காயிற்று.

இருட்டிலேதான் விளக்குக்கு பிரகாசம் அதிகம்.

தேய்பிறையின் இறுதியில்தான் தீபாவளி வருகிறது.

நம் தென்னாட்டில் தீபாவளி அன்று பட்டாசு வெடிப்பதைத்தான் அதிகமாகக் கேட்கிறோம்.

விளக்கு— குத்துவிளக்கு— இரண்டொரு முக்கியமான இடங்களில் ஏற்றப்படுவதையே பார்க்கிறோம்.

விளக்குகளின் வரிசைகளை கண்கூடாகப் பார்க்க வேண்டுமானால் காசியில், முக்கியமாக பஞ்ச கங்கை கூட்டத்திலும், பொதுவாக எல்லா நீராடும் துறைகளிலும் காணலாம்.

விடியற்காலம் பல்லாயிரக்கணக்கான அகல்களில் தீபங்கள் ஏற்றி நதியில் வரிசை வரிசையாகச் செலுத்தப்படுவதைக் காண்போர் மனதில் 'இதுதான் தீபாவளி' என்று தீர்மானம் ஏற்படும்.

தீபாவளிப் பண்டிகை ஒளியை முக்கியமாகக் கொண்டது.

ஐயப்பாடுகளும் அதன் விளைவாக அச்சங்களுக்கும், அதன் விளைவான அச்சமுறுத்தல்களுக்கும் காரணம் உள்ளத்தில் இருக்கும் இருள்.

இருள் அகல ஒளி வேண்டும்.

வெளி ஒளியைப் பெருக்கி அதை ஆண்டவனோடு சம்பந்தப்படுத்தும்போது உள்ளொளி மிளிரும்.

உள்ளொளியினால் உண்மை விளக்கம் ஏற்படும்.

அத்தெளிவையும் ஆண்டவனோடு சம்பந்தப் படுத்தும்போது அது நிலைக்கும்.

தேய்பிறையின் இருட்டிலே ஒளி விசேஷமான பிரகாசமாக இருப்பது மாத்திரம் அல்லாமல் அவசியமாகவும் இருக்கிறது.

## அன்னை சக்தி கருணை

சக்தியின் கருணைப்பற்றி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் சொல்வதாவது:

உலக நாகரிகம் தோன்றிய காலம் முதல் இருப்பது இந்து சமயம்.

இந்து சமயத்தின் வழிபாடுகளை தத்துவம், கர்மம், பக்தி என்று வகையாகப் பிரிக்கலாம்.

தத்துவ வழிபாட்டில் உலகம் முழுவதற்கும் கடவுள் ஒருவரே என்று வழிபட வேண்டும்.

அந்தப் பரம்பொருள் அங்கு இங்கு என்று பேதப்படாமல் எங்கும் நிறைந்திருப்பது.

அதன் சொரூபம் அகண்ட சச்சிதானந்த ஜ்யோதி சொரூபமே ஆகும். அந்த ஜோதி சொரூபத்தின் துணை இல்லாமல் எல்லாம் வல்லது. எங்கும் நிரம்பியது. யாவும் அறிந்தது.

இதுதான் நிலை; அனுபவ நிலை இப்படி அனுபவித்தவர்களை ஞானிகள், மகான்கள் என்று கூறுகிறார்கள்.

அருவமாக இருக்கும் பரம்பொருள் உருவ வடிவத்தைப் பெற்று பலவிதமான அவதாரங்களை எடுத்து, நல்லோர்களைக் காத்து, தீயவர்களைக் கண்டித்து, அருள் பாவித்துக் கொண்டு இருக்கிறது.

இந்த உருவ வழிபாட்டின் தொடக்கம்தான் பக்தி நெறி.

இதைப் பற்றித்தான் பதினெட்டு புராணங்களும் கூறுகின்றன.

புராணங்கள் பரம்பொருள் ஒன்றே என்றும் அதுவே பாதுகாக்கிறது என்றும் சொல்லுகின்றன.

உலகத்தைப் படைத்தவர் பிரம்மதேவன்.

படைக்கப்பட்ட மக்களுக்கு அறிவு கொடுப்பவர் சரஸ்வதி.

மக்களை துன்பத்திலிருந்து காப்பாற்றுபவர் மகாவிஷ்ணு.

மக்களின் வாழ்க்கைக்கு வேண்டிய செல்வத்தைக் கொடுப்பவள் மகாலட்சுமி.

மக்களைத் திருத்தி மாமனிதராக உயர்த்துபவர் தட்சிணாமூர்த்தி.

மக்களுக்கு எல்லா வகையான வளங்களைக் கொடுத்து நிலையாக வாழச் செய்பவள் ஞானாம்பிகை என்கிற பார்வதி.

சௌந்தர்ய லஹரி என்ற நூலில் ஆதிசங்கரர் சக்தியின் துணை இல்லாமல் ஐந்து தொழில்களைப் புரியும் மூர்த்திகளில் யாரும் செயல்பட முடியாது என்கிறார்.

கிருஷ்ண பரமாத்மா தோன்றியது முதல் பூதனை வதம் செய்வது முதலிய துஷ்டடர்களை தாம் ஒருவராகவே நின்று தண்டித்தார். தேசத்துக்கு நன்மை விளைவித்தார்.

நாகாசுரனைக் கொல்வதற்கு கிருஷ்ண பரமாத்மா செல்லும்போது சத்யபாமாவையும் தம் உடன் அழைத்துச் செல்கிறார்.

காரணம் வீரர்களைவிட சத்தியபாமாவின் சக்தி நரகாசுரனை வெல்வதற்குத் துணையாக விளங்கியது தான்.

பூமி தேவியின் மகன் நரகாசுரன்.

பூமி தேவியின் வேண்டுகோளுக்கு இணங்க நரகாசுரன் இறந்த நாளை தீபாவளிப் பண்டிகை நாளாகக் கொண்டாடும்படிச் செய்தார் கண்ணபிரான்.

இந்து மதத்திலேயே தர்ம சித்தாந்தத்தின் அடிப்படை விரதங்கள், பண்டிகைகள் என்று இரண்டு வகையான வழிபாடுகள் இருக்கின்றன.

ஏகாதசி விரதம், சஷ்டி விரதம், சோமவார விரதம், வரலட்சுமி விரதம் முதலிய விரதங்களின் போது உண்ணாநோன்பு இருந்து பகவானை வழி படுவது விரதங்கள் ஆகும்.

தீபாவளி, பொங்கல், வருஷப்பிறப்பு முதலியவை பண்டிகைகள் ஆகும்.

இத்தகைய சிறப்பான நாட்களில், நீராடி, புத்தாடை உடுத்திக் கொண்டு சிறப்பான உணவு வகைகளை தயார் செய்து பகவானுக்கு அர்ப் பணிக்க வேண்டும். பகவானுக்கு அர்ப்பணிக்கப் பட்ட உணவையே நாம் உட்கொள்ள வேண்டும்.

இதன் மூலமாக விரதங்களும், பண்டிகைகளும் மக்களை இறைவனோடு தொடர்பு படுத்து கின்றன.

இறைவனோடு தொடர்பு கொள்ளவே விரதம், பண்டிகை.

# திருவண்ணாமலை—
# யோகி சூரத்குமார்

யோகி சூரத்குமார் இந்த யுகத்தின் சிறப்பாளர். இவரிடம் சென்று வருபவர்கள் நிம்மதி பெறுகின்றனர். தெளிவு பெறுகின்றனர். நோய்க்கு மருந்தை பெறுகின்றனர். அன்புத் தாயாகப் பெறுகின்றனர். அறிவுக்கு ஞானியாகப் பெறுகின்றனர் ஆன்மீக விருட்சத்தை அடைந்த சந்தோஷத்தை பெறுகின்றனர். நல்ல மனத்தையும் நம்பிக்கையும் கொண்டு போகும் எவரும் யோகி சூரத்குமாரிடமிருந்து யாசிப்பதைப் பெறலாம்.

தன்னைப் பிச்சைக்காரன் என்று அடிக்கடி கூறிக் கொள்வார். கையில் கொட்டாங்குச்சி விசிறி, சாதாரண கட்டை என்று காணப்படும் யோகி சூரத்குமார், மிகப் பெரும் சக்தி பெற்றுள்ள விவேகியாவார். திருவண்ணாமலை ரமணரைக் கண்டது. சேஷாத்ரியைக் கண்டது. இதோ யோகி சூரத்குமார்.

யோகி சூரத்குமாரின் ஆன்மீக சக்தி, தெய்வீக உணர்வை காட்டி விடுகிறது. வெளித் தோற்றத்தைக் கண்டு ஏமாறாமல் எத்தனை மக்களால் தன்

உண்மை நிலையை' உணர முடிகிறது என்று சோதித்துப் பார்க்கின்றாரோ, பழுத்த தோற்றம், சிவந்த மேனி, கூரிய மூக்கு, தீட்சண்ய கண்கள் கிழிந்த சாக்கின்மேல் அவரின் இருக்கை.

'என் தந்தை தங்களை ஆசீர்வதிக்கிறார்' என்பது யோகி சூரத்குமார் அடிக்கடி சொல்லும் வார்த்தையாகும்.

வரும் மக்களை யோகி சூரத்குமாரின் கண்கள் ஊடுருவி நோக்குவதால் அவர்களின் வாழ்க்கையை படித்துக் கொண்டே போகிறார். இந்த தீட்சண்ய பார்வை அரை மணி நேரம் கூட தொடரும் நாம் தாக்குப்பிடிப்பது கடினம். வருபவரையும் பரந்த வெளியையும் பார்ப்பார். எங்கோ காது கொடுத்து கேட்பார். எதைக் கண்டோ சிரிப்பார்.

தரிசிக்கும் பக்தர் அவஸ்தை பட்டே தீருவார்.

யோகி சூரத்குமாரின் மௌனம் அன்புமொழி. சிறுவர்கள் போல தமிழ் பேசுகிறார். அறிஞர் போல் ஆங்கிலம் பேசுகிறார். டாக்டர் பட்டம் பெற்றவர் போல் இந்தி பேசுகிறார்.

நம் மனதில் உள்ள நினைவுகட்கு பதில் கூறப் பட்டு விடுகிறது. நொடிப் பொழுதில் நம்மைப் பற்றி அவர் அறிந்து கொள்வார். பாகுபாடின்றி நிழல் தரும் விருட்சம் போன்றவர். யோகி சூரத்குமார்.

யோகி சூரத்குமார் பதில்கள் உண்மையின் பிரதிபலிப்பு. நம்பிக்கைமிளிறுகிறது. இவர் எதையும் எதிர்பார்ப்பதில்லை. நம் எண்ணத்தில் உயர்ந்து நிற்கிறார். இவர் காசி பக்கத்தில் இருந்து வந்தவர். இவர் ஐயந்திரிபற படித்தவர். அரவிந்தர், ரமணர், ராமதாஸ் இவர்களை குருவாக மதிக்கிறார். இவர் திருவண்ணாமலை இரயில்வே ஸ்டேஷன் புன்னை மரத்தடியில் பல காலம் இருந்தவர். இவர் தனித்திருக்கிறார். இப்போது பெரிய கோபுரம் எதிரேயுள்ள சன்னதி தெருவில் இருக்கிறார்.

மக்கள் இவரை அண்ணாமலை சன்னதியில் ஐக்கியமானதை கண்டதாகச் சொல்கிறார்கள். இவர் சொன்னது நடக்கிறது. யோகி சூரத்குமார் திருவண்ணாமலையில் இருந்து கொண்டு பக்தர்கட்கு எதிர்காலத்தைக் காட்டிக் கொண்டுள்ளார். தொல்லைகட்கு நிவாரணம் சொல்லிக் கொண்டுள்ளார்.

யோகி சூரத்குமார் விசிறி சாமியார் என அன்போடு அழைக்கப்படுகிறார். பாலகுமாரரும் ஜேசுதாசர் யோகியர் பெருமைகளை சொல்லச் சொல்ல மெய் மறந்திருக்கிறோம். இவரின் மகாத்மியம் சூரிய ஒளி போல் எங்கும் வியாபித்து வருகிறது.

# திருவண்ணாமலை—
# பகவான் ரமணர்

'வைராக்கியமாக, வாழ்வதே, மகிழ்ச்சிக்கு நேர்வழி' என்று காட்டியவர் ரமணர்.

பகவான் ஸ்ரீரமணர் திருச்சுழியிலிருந்து வந்தது முதல் சமாதி நிலை அடையும்வரை ஐம்ப தாண்டுகட்கும் மேலாக திருவண்ணாமலையை விட்டு வெளியூர் போனதேயில்லை.

உலகெங்குமிருந்தும்கூட, பலர் பிரமுகர் களான சாமர்செட்மாம், மற்றும் ராஜாஜி, பாபு ராஜேந்திர பிரசாத், இந்திரா காந்தி, ராஜீவ்காந்தி ஜம்னாலால் பஜாஜ், மொரார்ஜி தேசாய் இங்கே வந்து அமைதியும் தீர்வும் பெற்று திரும்பினர்.

எதனால் துக்கமோ, அதை களைந்தெறிந்து விட்டு தாம் இன்ப வாழ்வு வாழ்ந்ததோடு, மக்கட் களுக்கும் நல்வழி காட்டியவர் ரமணமகரிஷி.

திருவண்ணாமலை- செங்கம் சாலையில் விரிந்து பரந்த இடத்தில் ரமணாச்ரமம் உள்ளது. பகவானின அன்னை, பகவான், மயில், பசு, நாய், குரங்கு, முயல் சமாதிகள் உள்ளன. மரங்களும் செடிகளும் பூக்களும் மயில்களும் பகவான் காட்சி

களும் நம் உள்ளத்தை உயர்ந்த எண்ணமும் செய லும் கொண்ட உலகுக்கு இட்டு போகும்.

சிறந்த ஆச்ரம வெளியீடுகள், புத்தகங்கள், டாலர்கள், கேசட்டுகள், பசியாற உணவுச் சாலை, தங்க அறைகள், விருந்தினரை கவனிக்க ரமணரின் தமையனார் மகன் கணேசன். ஒரு அற்புத அனு பவமே காண்பீர்கள்.

நினைக்க முக்திதரும் அண்ணாமலை, அருணா ஜலேஸ்வரர், சேஷாத்திரி மடம், சாத்தனூர் அணை, பெரிய கோபுரம் (தமிழ்நாட்டிலேயே ஏன் உலகிலேயே மிக மிக அதிக உயரமானது) திரு வண்ணாமலையில் காணுங்கள்.

நீங்களும் போய்க் கண்டு வணங்கி, அமைதி பெறுங்கள். இந்திரா காந்தி அரைமணிக்கும் அதிகமாக ரமணர் சிலை முன் அமர்ந்துவிட்டு, 'சொல்ல முடியவில்லை அற்புத அனுபவம்' என் றார். 'நான் அரசியலுக்கு வராது இருந்தால் ரமணர் போல்தான் வாழ்ந்திருப்பேன்' என்றார் மகாத்மா காந்தி

சர்வதேச புகழ் பெற்ற பிரான்ஸ் எழுத்தாளர் சாமர்செட்மாம், "பேச ஒன்றும் இல்லை, பார்வையோடு பார்வை சந்தித்த பின், உரை யாடல் தேவையாகப்படவில்லை" என்றதோடு, தாம் திருவண்ணாமலை ரமணாச்ரமத்தில் சில

நாட்கள் தங்கி ரமணரோடு ஏற்பட்ட தம் அனு பவத்தை 24 பக்க புத்தகமாக வெளியிட்டு வெளி நாடுகளிலெல்லாம் ரமணரைப் பற்றி வலுவாக தெரிவித்தார்."

"மவுண்டன்பாத்" இதழ் ரமணரைப் பற்றி தொடர்ந்து பேசிக் கொண்டே உள்ளது.

மக்கள், திருவண்ணாமலை பகவான் ஸ்ரீரமணர் ஆசிரமம்போய் வணங்கி நிவாரணமும் அமைதியும் பெறுங்கள். பல நாடுகளில் ரமண ஆசிரமக் கிளைகள் பரவி வருகின்றன.

மகரிஷி ரமணர் உரைகளில் இருந்து...

"இதயத்தில் வீற்றுள்ள ஆன்மாவை அறிந்து' அந்நிலை நிற்பவன், சரியா பிசகா என்று குழம்பு வதில்லை. இறைவன் திருவருளே நடத்தும் போது எல்லாம் சரியாகவே இருக்கும்.

ஆசைக்கு இடம் கொடுத்து ஆசையை அடக்க முயல்வது, நெய் வார்த்து தீ அணைப்பது போலாகும்.

மனித வாழ்வின் உட்பொருளை மெய்யுணர் வில் தான் அறிய முடியும். ஆன்மீகமும் உலகிய லும் ஒன்றே. இதை அறிந்தால் இன்னல்கள் ஏது?"

ஆம், பகவான் ரமணரின் வாழ்விலும் போத னையிலும் நாம் இந்தியாவின் சிறப்புத் தன்மை

யை, தூய்மையை, உலகப் பற்றற்ற மனித் குலத்தை காண்கின்றோம். ஒரு மாபெரும் சுருதி யின் அடிப்படையில் எழுந்து, ஆயிர வண்ண மெட்டுகளுடன் படர்ந்து, இந்திய ஆத்மாவின் சக்தியால் மீண்டும் மீண்டும் இளமை எய்தி என்றும் திருவண்ணாமலை ரமணாச்ரமத்தில் ஒலித்துக் கொணடே உள்ளது.

இந்தியாவில் ஆன்மீக ஒளி உலகெங்கும் பரவி அன்பு வெள்ளத்தில் மூழ்கடிக்கும் என்ப தற்கு எடுத்துக் காட்டாக வாழ்ந்து காட்டியவர் ரமண மகரிஷி. திருவண்ணாமலையை நினைத்த வுடன் காலத்தால் அழியாத கலாசாரமும், அதில் ஆன்மீக ஒளியை பரப்ப வந்த தீபச் சுடராய் இருந்த ரமண மகரிஷியின் பெருமையும் நிற்கிறது.



# ப. சிதம்பரம் பற்றி...

இவன் யாரு? நல்லா எழுதுரான் னேன்—காமராஜர். ஆர்வமும், ஆற்றலும் மிக்கவர்—ஈ. வெ. கி. சம்பத். சுவை குன்றாது, நயம் கெடாது தமிழை மென்மையாகக் கையாள்பவர் — கண்ணதாசன். தேவையான சொற்களை மட்டும் எழுதி; தனி நடையில் தெளிவாகச் சொல்பவர்—தமிழ்வாணன். முன் னேறத் துடிப்பவர்களுக்கு, உள் நாட்டிலேயே உயர்ந்தவர்களை அற்புதமாக உதாரணம் காட்டு பவர் வலம்புரி ஜான். எழுத்துத் திறனுக்கு முத்திரை குத்தும் கருத்துக் குவியல்காரர்—அன்பு தாசன். வெற்றி பெற்றவர்களைக் காட்டி முன்னேற யோசனை களைச் சொல்பவர் — குமுதம். வாழ்க்கைப் போராட்டத்தில் இறங்கி வெற்றியைப் பார்க்கத் தூண்டுபவர். சோதனைகளை எதிர்நோக்க ஊக்கப்படுத்துபவர்- சாவி. சந்திக்கும் பிரச்சினைகட்கு, திறவுகோல்தருபவர்—வானொலி. சுறுசுறுப்பானவர் என்பதை செயல்களில் காட்டுவர்—ராணி.